# எல்லாம் தமிழ்



சங்கர்...

கி. வா. ஜகந்நாதன்

# எல்லாம் தமிழ்

கி. வா. ஜகந்நாதன்



அமுத நிலையம் லிமிடெட்
தேனாம்பேட்டை :: சென்னை—18.

# முகவுரை

இதற்குமுன் நான் எழுதியுள்ள 'புதுமெருகு' என்ற புத்தகத்தைப் போன்றது இது. சங்கநூல்களில் உள்ள குறிப்புக்களைக்கொண்டு பின்னிய வரலாறுகளும், பிற்காலத்துச் சதகங்களிலும் தனிப்பாடல்களிலும் உள்ள செய்திகளைக் கொண்டு உருவாக்கிய கதைகளும், கேள்வியினால் தெரிந்தவற்றை ஆதாரமாகக் கொண்ட கதைகளும் இந்தப் புத்தகத்தில் இடம் பெற்றிருக்கின்றன.

தமிழ்ப்புலவர்கள் தம்முடைய கவித்திறத்தினாலே செய்த செயல்களை ஒவ்வொரு வரலாற்றிலும் காணலாம். அந்தச் செயல்களுக்கு உரம் தந்தது புலவர்களிடத்தில் இருந்த தமிழ். இவ்வரலாறுகளில் வரும் நிகழ்ச்சிகள் எல்லாம் தமிழின் ஆற்றலை வெளிப்படுத்துவன. ஆகவே இதற்கு "எல்லாம் தமிழ்" என்ற பெயர் வைத்தேன்.

ஒரு நாட்டின் பெருமையைத் தெளிவதற்கு இத்தகைய வரலாறுகள் சிறந்த ஆதாரங்களாக விளங்குகின்றன.

மயிலாப்பூர்
5-11-'49

கி. வா. ஜகந்நாதன்

# உள்ளுறை

# எல்லாம் தமிழ்

## புலவர் இட்ட சாபம்

கதிரவன் இன்னும் வானத்தில் எழவில்லை. இன்னும் சிறிது நேரத்தில் அவன் தன் செங் கதிர்களைப் பரப்பி உலகத்தில் பவனி வரப் புறப்பட்டுவிடுவான். உலகம் விழித்துக்கொண்டது. இயற்கைத் தேவி மலராலும் புள்ளினங்களின் மகிழ்ச்சி ஆரவாரத்தாலும் கதிரவனை வரவேற்க ஆயத்தமாக இருக்கிருள். புல்லுக்கும் பூவுக்கும் மரத்துக்கும் மண்ணுக்கும், புனலுக்கும் புள்ளினத்துக்கும் பொலிவு தரும் நாயகன் அல்லவா அவன்? மக்கள் அனைவரும் துயில் நீங்கி வாழ்க்கையின் புதிய அத்தியாயத்தைத் தொடங்க முனையப் போகின்றனர். ஆடவரும் மகளிரும் நீராடி இறைவனை வழிபட்டு இல்லற ஒழுக்கங்களில் ஈடுபடப் போகின்றனர்.

அந்த மடமங்கையும் என்றும்போல அன்று எழுந்தாள். ஆற்றுக்கு நீராடச் சென்ருள். குடத்தைக் கையில் எடுத்துக்கொண்டு மென்கொடி அலசி நடப்பதுபோல நடையிட்டுச் சென்ருள். அவளுடைய நடையில் அன்று

ஏதோ ஒன்று இருந்து தடை செய்தது. அவளுக்கே தெரியவில்லை. உலகம் அன்று அவள் கண்முன் களிக் கூத்தாடுவதாகவே தோன்றவில்லை. எங்கும் ஒரே மோன மூட்டம், துயரத்தின் வீக்கம்போல அவளுக்கு ஓர் உணர்ச்சி இருந்தது. 'ஏன் இப்படிக் குழம்புகிறது உள்ளம்? கண்ணில் படும் காட்சியிலே ஜீவனையே காணுமே!' என்று அவளும் சிந்தித்தாள்.

அவள் குழப்பத்துக்குத் துணை செய்வதுபோல அவள் தாய் அழைக்கும் குரல் அவள் காதில் விழுந்தது. "ஏன் அம்மா இன்று இவ்வளவு அவசரம்? ஆற்றுக்கு வழக்கம்போலப் போகாமல் முன்பே எழுந்து புறப்பட்டு விட்டாயே?" என்று தாய் கேட்டாள். அப்போதுதான் அவளுக்குத் தான் புறப்பட்ட நேரம் வழக்கத்துக்கு முந்தியதென்று தெரியவந்தது. அவள் முந்தி எழுந்த தற்கு என்ன காரணம்? குறிப்பிட்டுச் சொல்லும்படி ஒன் றும் இல்லை. ஆனாலும் அவளுக்கு விரைவிலே விழிப்பு ஏற் பட்டுவிட்டது. ஆற்றிலிருந்து யாராவது வா, வா என்று அழைத்தால் போகவேண்டுமென்று ஒரு வேகம் உண் டாகும். அவளுக்கு அப்படித்தான் இருந்தது. ஆனால் ஆற்றிலிருந்து அழைக்க யார் இருக்கிறார்கள்? அவளுக்குத் தெரிந்த ஒருவரும் இல்லை. அவளுக்குப் பழக்கம் இல்லாத ஒன்று அவளைக் கைகாட்டி, வா வா என்றுதான் அழைத் திருக்கவேண்டும். அது உவகையோடு வந்த அழைப்பு அன்று. ஏனெனில், அவள் அந்த அழைப்பை ஏற்றுக் கொண்டவளைப் போலத்தான் வேகமாகப் புறப்பட்டாள்; ஆனால் அந்த வேகத்தில் கிளர்ச்சி இல்லை; மலர்ச்சி இல்லை. யாரோ பிடித்து உந்த அதை மீற முடியாமல் செல்பவ ளைப் போலவே அவள் நடந்தாள். தாய் சொல்வது காதில் விழுந்தும் விடை சொல்லாமலே போனாள்.

ஆற்றங்கரையை வந்து அடைந்தாள். ஆறு அவளிடம் பேச முடிந்திருந்தால், "திரும்பிப் போ" என்று சொல்லியிருக்கும். நாள்தோறும் வந்து தன்னோடு கலந்து பழகும் அந்த மங்கையிடம் ஆற்றுக்கு அன்பு இருப்பது இயற்கை. ஆற்றிலே இறங்கிவிட்டால் மற்றவர்களைப் போலவா அவள் குளிப்பாள்? நீரரமங்கையைப் போலக் குதித்து நீந்திக் களித்து விளையாடுவாள். அவளுடைய விளையாட்டுக்கு இடமாகவும் துணையாகவும் இருக்கும் ஆற்றுக்கு அவள் அழகும் பெருமையும் நன்றாகத் தெரியும்.

இன்று ஆறு களிக்கவில்லை. அவள் மெல்லத் துறையில் இறங்கினாள். நீரில் காலை வைத்தவுடன் திடுக்கிட்டு வைத்த காலை எடுத்தாள்; ஒன்றும் இல்லை; ஏதோ ஒரு சிறு குச்சி அங்கே ஒதுங்கியிருந்தது. ஏதோ நினைப்பாக இறங்கினவள் அது காலில் பட்டவுடன் திடுக்கிட்டுப் போனாள். ஒருகால் ஆறுதான் வேறு வழி இல்லாமல் இப்படி எச்சரிக்கை செய்ததோ என்னவோ! தன்னை அச்சுறுத்தியது ஒரு சிறு குச்சி என்பதை அவள் அறிந்தவுடன் தனக்குள் சிரித்துக்கொண்டாள். அதை எடுத்து வீசி எறிந்தாள்.

நீராடப் புகுந்தாள். ஆடையைக் கசக்கி உடம்பைத் தேய்த்து நீராடினாள். நீருள் அமிழ்ந்தும் தாவியும் குதித்தும் விளையாடினாள். சிறிது ஆற்றின் வேகத்திலே மிதந்து போய் எழுந்தாள்.

இப்படி நீராடிக்கொண்டிருக்கையில் எதிரே ஆற்று நீரில் ஒரு மாவிலைக் கொத்து மிதந்துவந்தது. இலைகள் சில மேலே மிதந்தன; சில நீருள் மறைந்திருந்தன. அருகில் வர வர அது வெறும் இலைக்கொத்தாகத் தோன்ற

வில்லை. ஆம்; அந்தக் கொத்தில் ஒரு மாங்காயும் இருந்தது. அது கண்ணிலே பட்டவுடன் நீராடும் மடமகளின் நாவில் நீர் சுரந்தது. மெல்ல அதன் அருகே சென்று சட்டென்று எடுத்தாள். இலைகள் அகலமாகத் தளதளவென்று இருந்தன. அந்தக் காயோ தனியாக ஒரு மணம் வீசியது. 'நாம் இவ்வளவு முன்னேரத்தில் ஆற்றுக்கு வந்த பயனை இதோ கண்டுவிட்டோமே!' என்று அவள் எண்ணினாள். கையில் எடுத்த மாங்கொத்தை அப்படியும் இப்படியுமாகத் திருப்பித் திருப்பிப் பார்த்தாள். பார்ப்பதற்கே அழகாக இருந்தது மாவிலைக் கொத்து.

மாங்காயைத் தனியே பறித்து இலைக்கொத்தைக் கரையின்மேல் வீசி எறிந்தாள். அதற்குள் அவளுக்குச் சிறிய குழந்தையைப்போல ஆவல் தோன்றியது; மாங்காயைச் சுவைத்துப் பார்க்கவேண்டும் என்ற ஆவல்தான். காலை நேரத்தில் தன்னையே தேடி வந்ததுபோல் வந்து கைப்பட்ட அதைத் தின்பதில் என்ன தவறு? அதைக் கடித்தாள். அதன் நறுமணம் நன்றாகத் தெரிந்தது. தே மாங்காய்; அதாவது இனிப்பான இனத்தைச் சேர்ந்தது அது; காயாகத் தின்றாலே நன்றாக இருப்பது. கடித்துச் சுவைத்துச்சுவைத்துத் தின்றுகொண்டிருந்தாள்.

ஏதோ ஆளரவம் கேட்டது. மாங்காய்ச் சுவையில் உலகையே மறந்து நின்ற பெண் நிமிர்ந்து நோக்கினாள். ஆற்றங்கரையில் யாரோ சிலர் வந்துகொண்டிருந்தனர். அவர்களுடைய பேச்சில் சினம் ஒலித்தது. "யார் அங்கே?" என்று அதட்டும் குரல் கேட்டது. அவர்கள் நீராடும் துறையை அணுகிக்கொண்டிருந்தனர். அருகிலே வந்து விட்டார்கள்.

"யார் நீ?"

"ஏன்?" என்று கேட்டாள் அவள்.

"அது என்ன?" என்று அவர்கள் வினவினார்கள்.

"தெரியவில்லையா? மாங்காய்தான்."

"ஏது?"

"கிடைத்தது."

"எங்கே?"

"இங்கேதான்."

வந்தவர்கள் சுற்று முற்றும் பார்த்தார்கள். கரை மேலே கிடந்த மாவிலைக் கொத்து அவர்கள் கண்ணில் பட்டது. அதை ஒருவன் எடுத்தான். "இது இங்கே எப்படி வந்தது?" என்று கேட்டான் அவன்.

"மாங்காய் வந்ததுபோல அதுவும் வந்தது" என்றாள் அவள்.

"மாங்காயாவது; வரவாவது! இது அரண்மனைத் தோட்டத்து மாங்காய்; அதுவும் காவல் மரத்துக் காய். இதை நீ தொட்டதே தவறு. அதோடு துணிச்சலாகத் தின்கிறாய். வா, அரசனிடம். நீ திருடி வந்திருக்கலாம்; அல்லது உன் காதலன் திருடிக்கொண்டு வந்து தந்திருக்கலாம்."

"என்ன, வாய்க்கு வந்ததைப் பேசுகிறீர்கள்?" என்று சீறிய பெண் புலி போல் அவள் கேட்டாள்.

"அந்தக் கோபமெல்லாம் உன்னிடமே இருக்கட்டும். வா, அம்மா, வா. அரசனிடம் வந்து உன் நாடகத்தை நடத்து" என்று சொல்லி அந்த முரடர்கள் அவளை அழைத்துப் போனார்கள்.

## 2

சேர நாட்டுப் பகுதியை ஆண்ட சிற்றரசன் நன்னன். மற்ற அரசர்களுக்கும் அவனுக்கும் பல வகையில் வேறு பாடு உண்டு. தமிழின்பத்தை நுகர அவனுக்கு உள்ளம்

இல்லை; புலவர் பாடும் புகழைக் கேட்க அவனுக்குக் காதில்லை. பகைவர் மகளிர் அழுகையைக் கேட்டு மகிழும் கல் நெஞ்சுடையவன். அந்த மகளிருடைய கூந்தலை மழித்து அவற்றைக் கயிருகத் திரிக்கச் செய்து அவற்றை வண்டி மாட்டுக்கு மூக்கணாங் கயிருகப் பயன்படுத்தும் கொடியவன்.

பழங்காலத்துத் தமிழ் மன்னர்களுக்குச் சில அடையாளங்கள் உண்டு. அந்த அடையாளங்களில் காவல்மரம் என்பதும் ஒன்று. ஒவ்வொரு குலத்துக்கும் ஒவ்வொரு காவல் மரம் உண்டு. ஆலயங்களில் தல விருட்சத்தைப் பாதுகாத்து வழிபடுவதுபோல அந்த மரத்தைப் போற்றி வளர்த்து வழிபடுவது மன்னர் வழக்கம். பகைவரோடு போர் செய்து வெற்றி கண்டால் பகைவருடைய முரசை எடுத்துக்கொள்வதும் காவல் மரத்தை அழிப்பதும் பழைய காலத்து மரபு.

நன்னனுக்குக் காவல் மரமாக இருந்தது மா. அவனுடைய தோட்டத்தில் அது இருந்தது. யாரும் அதனை அணுக இயலாது. ஆண்டுதோறும் அதில் கனியும் முதல் கனியை நன்னன் தன் குல தெய்வத்துக்கு நிவேதித்து உண்பான். ஆற்றங்கரையில் இருந்தது காவல் தோட்டம்.

அந்த ஆண்டு மரம் நன்ருகப் பூத்திருந்தது. ஆற்ருேரமாக இருந்த கிளையில் ஒரு பெரிய காய் காய்த்திருந்தது. கடவுட் பூசைக்கு உரியது அந்தக் காய் என்று குறித்து வைத்திருந்தனர் காவலாளர். அன்று காலையில் வந்து பார்க்கையில் காயைக் காணவில்லை. அவர்கள் குழம்பினர்கள். தங்கள் காவல் வீணுயிற்றென்று மறுகினர்கள். அரசனுக்கு என்ன விடை சொல்வதென்று அஞ்சினர்கள். எங்கே போயிருக்கும் என்று ஆராயப் புறப்பட்டார்கள்.

அவர்கள் ஆராய்ச்சியில் அகப்பட்டாள் முன் சொன்ன மங்கைநல்லாள்.

"உள்ளதைச் சொல்லிவிடு" என்று அவளிடம் காவலாளர் கூறினர்.

"ஆற்றோடு வந்தது; எடுத்துத் தின்றேன்" என்றாள் அவள்.

"இல்லை, இல்லை. யாரோ இதைத் திருட்டுத்தனமாகப் பறித்துக்கொண்டு வந்து உனக்குக் கொடுத்திருக்கிறார்கள். கள்வன் இன்னானென்று சொல். உன்னை விட்டு விடுகிறோம்."

"அப்படி ஒருவரையும் நான் அறியேன்."

"அப்படியானால் நீதான் கள்வியா?"

"கள்வியா! ஆற்றிலே வந்த காயை எடுப்பதற்கு எனக்கு உரிமை இல்லையா? கைக்கு எட்டினதை வாய்க்கு எட்டச் செய்வது தவறா?"

"கைக்கு எட்டினதெல்லாம் வாய்க்கு எட்டுவதில்லை என்பது உனக்குத் தெரியாது போலும்!" என்று ஒருவன் ஏளனமாகப் பேசினான்.

அவள் மேலே பேசவில்லை. அன்று காலையில் ஆற்றுக்குப் புறப்படும்போது தாய் அழைத்ததும், ஆற்றில் ஒரு கோல் தடுத்ததும் அவள் நினைவுக்கு வந்தன. அவளுடன் இளமை தொடங்கிப் பழகின ஆறு இந்தப் பழியைச் சுமத்தவா அவளை அழைத்தது? அதற்குத்தான் அவ்வளவு விரைவாக ஆற்றுக்கு வந்தாளா? காவல் மரத்தின் பெருமையும் அருமையும் அவளுக்கு நன்றாகத் தெரியும். அவள் செய்தது குற்றமானால் அறிந்து செய்ததல்லவே! மாங்காய் இன்ன மரத்தைச் சார்ந்ததென்று தெரிந்துகொள்ள அடை

யாளம் ஒன்றும் இல்லையே! அப்படி இருக்க அதை எடுத்ததிலும் தின்றதிலும் என்ன பிழை இருக்கிறது? அவள் இப்படி என்ன என்னவோ சிந்தனையுள் ஆழ்ந்தாள். அவள் முகம் வாடியது. காவலரைப் பின்தொடர்ந்து நடந்தாள்.

## 3

நன்னன் காதில் செய்தி விழுந்தது. உள்ளது உள்ளபடியே விழவில்லை. 'காவல் மாமரத்துக் காயை ஒரு பெண் பறித்துத் தின்றாள்' என்ற அளவிலே அவன் கேட்டான். "பெண்ணா! அத்தகைய அரக்கியும் இந்த நாட்டில் இருக்கிறாளா? பகைவர் அணுகுவதற்கு அரிய அந்த மரத்திலிருந்தா அவள் காயைப் பறித்தாள்? காவலர் என்ன செய்தனர்? தூங்கினார்களா?" என்று படபடத்துக் கேள்விமேல் கேள்வியை வீசினான். "இதோ அவளை அழைத்துக்கொண்டு காவலாளரே வந்துவிட்டார்கள்" என்ற பதில்தான் கிடைத்தது.

ஈர ஆடையுடன் வந்தாள் அவள். நெஞ்சில் ஈரமில்லாத காவலரைத் தொடர்ந்து வந்து நின்றாள். "இவளா காவல் மரத்தின் பெருமையைக் குலைத்தவள்?" என்று கண் சிவக்க, மீசை துடிக்க உறுமினான் அரசன்.

"ஆம். இவள்தான் அந்தக் காயைத் தின்றாள்."

"தின்றாளா? நஞ்சைத் தின்பதும் அதைத் தின்பதும் ஒன்று என்பதை இந்தப் பேதை அறியவில்லையோ? இவள் எப்படி அதைப் பறித்தாள்?"

"யாரோ ஒருவன் அதைக் களவு செய்துகொண்டு வந்து கொடுத்திருக்கிறான். அதைப் பெற்று ஆற்றங்கரையிலே தின்றுகொண்டிருந்தாள்."

"அப்படித்தானு?" என்று நன்னன் அவளைப் பார்த்துக் கேட்டான்.

அவள் உடம்பில் ஒரு நடுக்கம் உண்டாயிற்று. ஈர ஆடையை நெடுநேரமாக உடுத்திருந்ததால் அல்ல; கேட்ட வார்த்தைகளை அப்படியே நம்பும் அந்தக் கொடிய அரசனது கேள்வி அவளை உலுக்கியது.

"அரசே, ஆற்றில் நீராடினேன்; மிதந்து வந்த காயை எடுத்துத் தின்றேன். அவ்வளவுதான் எனக்குத் தெரியும்" என்று மெல்லிய குரலில் அவள் மொழிந்தாள்.

"அது எப்படி மிதந்துவரும்? காற்று அடித்தது? குரங்கு பறித்துப் போட்டதா? மரத்தில் நேற்று வரையில் இருந்த காய் இன்று உனக்காகத் தானே ஆற்றில் விழுந்து உன் கையில் ஏறியதோ? உன்மேல் அதற்கு அத்தனை காதலோ?"

காவலர் சத்தம் போடாமல் உள்ளே கிளுகிளுத்தனர்.

"அரசே, நான் நீராடிக்கொண்டிருந்தேன் என்பதை என் ஆடையே உணர்த்தும். மாங்காய்க்காக மானத்தைப் பறி கொடுக்கும் இயல்பு என்னிடம் இல்லை. உண்மையைக் கூறிவிட்டேன். அறத்திற்கும் உண்மைக்கும் இடம் இருந்தால் என்மேல் சுமந்த பழி நீங்கட்டும்" என்று சிறிது தைரியம் பெற்றுக் கூறினாள் அவள்.

அரசன் சில அமைச்சர்களை அழைத்துவரச் செய்தான். வேறு சில முதியவர்களையும் அழைத்தான். புலவர் சிலர் வந்தனர்.

ஊர் முழுவதும் இந்தச் செய்தி பரவியது. அரண்மனை வாயிலில் பெருங் கூட்டம் கூடியது.

அரசன் அமைச்சர்களிடமும் பிறரிடமும் செய்தியைச் சொன்னான். "காவல் மரத்துக்கு இழுக்கு உண்டாக்குவதும் கடவுள் உருவத்தைச் சிதைப்பதும் கொடிய குற்றங்கள். பகைவர்கள் இம்மரத்தை அணுகலாம் என்று நினைப்பதற்கே அஞ்சுவார்கள். அதன் காயை இந்தப் பேதை மகள் பறித்து உண்டாள். இந்தக் குற்றம் மிகப் பெரிது. இன்று இதைக் கவனிக்காமல் விட்டால் காவல் மரத்தின் மதிப்பே போய்விடும். நம் குடியில் வழிவழி வந்த மன்னர் காவல் மரத்தைக் கண்ணில் மணி போல, உடம்பில் உயிர்போலப் பாதுகாத்து வந்தனர். அவர்கள் அடியொற்றி அரசு செலுத்தும் நாம் அந்த மரபைக் காப்பாற்றவேண்டும்."

அமைச்சர்களிற் பலர் அரசன் போன போக்கே செல்லுகிறவர்கள். "மலையின்மேல் கடல் ஏறுமா?" என்றால், "அரசர் ஆணை இருந்தால் செல்லும்" என்று சொல்லித் தாளம் போடுபவர்கள். அவர்கள், "மன்னர் பிரான் திருவுள்ளத்தில் நினைப்பது சரிதான்" என்றார்கள்.

ஆனால் முதியவராக இருந்த அவைக்களப் புலவர், "அரசே, நான் சொல்வதற்குச் சற்றுச் செவி சாய்க்க வேண்டும்" என்றார்.

"என்ன?" என்று மிடுக்கோடு அவரைப் பார்த்தான் நன்னன்.

"இந்தப் பெண்ணைப் பார்த்தால் குற்றம் செய்பவளாகத் தோன்றவில்லை. இவள் சொல்வது உண்மையாகத் தான் இருக்கவேண்டும். கட்டுக் காவலுக்குள் இருக்கும் மரத்தை அணுகிக் காயைப் பறிப்பதற்கு மிகுதியான சாமர்த்தியம் வேண்டும். பகைவரே அணுகுவது அரிது என்று அரசர்பிரான் சொல்லும்போது, இந்த மெல்லியல்

எப்படி அனுமதிக்க முடியும்? ஒரு சிறு மாங்காய்க்காக அரச தண்டனையை ஏற்றுக்கொள்ள யாரேனும் முன் வருவார்களா? இவற்றையெல்லாம் ஆராய்ந்து பார்க்கவேண்டும்''

புலவர் கூறியதை மன்னன் அலட்சியமாகவே கேட்டான். ''அப்படியானால் இவள் பறிக்கவில்லை, இவளோடு சேர்ந்த கள்வன் ஒருவனும் உண்டு என்று சொல்லுகிறீர்களா?'' என்று வினவினான்.

''இல்லை, இல்லை. இவள் குற்றம் செய்தவள் அல்லை என்று சொல்லுகிறேன்.''

''அது எப்படிச் சொல்லலாம்? இவள் அழகிய பெண்ணாக இருக்கிறாளென்பதற்காகக் குற்றத்தை மறந்துவிடலாமா? இவள் செய்த குற்றத்துக்கு முன் இவள் அழகும் இளமையும் நில்லா. இவள் துணிவைத்தான் நாம் நினைக்கவேண்டும்.''

''அரசே, மற்றவர்கள் குற்றம் செய்ததாகத் தெரிந்தாலே பன்முறை ஆராய்ந்து பார்க்கவேண்டும். இளம் பிள்ளைகளும் மங்கையரும் முதியவரும் குற்றம் செய்ததாக விரைவிலே முடிவு கட்டக்கூடாது.''

''குற்றம் செய்தவள் இவள்தான் என்பதில் ஐயமே இல்லை. அதைப்பற்றிய விவாதத்துக்கும் இடம் இல்லை. இவளுக்குரிய தண்டனையைத்தான் நாம் நிச்சயிக்க வேண்டும்'' என்று அரசன் கூறியபோது அங்கு இருந்த முதியோர் அஞ்சிப் பெருமூச்சு விட்டனர்.

''தண்டனையைப்பற்றிக்கூட ஐயம் இல்லை. அரச குலத்தின் உயிராகிய காவல் மரத்தை வெட்டியதற்குச் சமானமான குற்றம் இது. இதற்குரிய தண்டனை சாதாரணமாக இருக்க முடியாது. எது கடுமையான தண்டனையோ அதைத்தான் இதற்கு விதிக்கவேண்டும். ஆம், கொலைத்

தண்டனைதான் இதற்கு ஏற்றது" என்று அரசன் தீர்ப்பு அளித்தான். முதியவர்கள் கண்களை மூடிக்கொண்டார்கள். பழி சுமத்தப்பட்ட பெண், 'ஆ!' என்று அலறிக் கீழே விழுந்தாள். அரசன் எழுந்து சென்றுவிட்டான்.

## 4

கொலைத் தண்டனையை இன்னும் நிறைவேற்றவில்லை. அதற்குள் அரசனுடைய கோபத்தைத் தணித்து அத் தண்டனையை மாற்றப் பலர் முயன்றார்கள். மக்கள் யாவரும் ஒருமுகமாக அரசன் செய்கையை வெறுத்தனர். "பெண் என்றால் பேயும் இரங்குமே! இந்த அரசன் பேயினும் கொடியவனாக இருக்கிறானே!" என்று அழுங்கினர். அறங்கூறவையத்துப் பெரியோர் அரசனிடம் சென்று பேசினர். அவன் இம்மியும் இரங்கவில்லை. தண்டனையை நீக்க முடியாதென்பதை உணர்ந்த அவர்கள், கொலைத் தண்டனைக்கு மாற்றாக ஏதாவது செய்து பார்க்கலாமென்று ஆராய்ந்தார்கள்.

கொலைத் தண்டனை பெற்றவர்களை மீட்கவேண்டுமானால், குற்றவாளிகளின் நிறைக்கு ஏற்ற பொன் தண்டமாக இறுத்தால் மீட்சி கிடைக்கும். பெரியோர்கள் அந்தப் பெண்ணின் தந்தை, சுற்றத்தார் ஆகியவர்களிடம் இந்தக் கருத்தைத் தெரிவிக்கவே, அவர்கள் பொன்னைத் தொகுத்தனர். அந்தப் பெண்ணின் நிறையைத் தெரிந்து அதற்கு ஏற்ற பொன்னைக் கொண்டு அவளைப் போல ஒரு பாவை செய்வித்தார்கள். அதைக் கொண்டு அரசன் முன் வைத்தார்கள். பெரியோர், "அரசே, கொலைத் தண்டனை பெற்றவருடைய நிறைக்குத் தக்க பொன் கொண்டு அந்தத் தண்டனையை மாற்றுதல் வழி

வழி வந்த வழக்கம். பெண்ணின் குற்றம் அவள் அறிந்து செய்ததன்று. ஆகவே, இந்தப் பாவையை ஏற்றுக்கொண்டு அவளுக்கு உயிர்ப் பிச்சை வழங்க வேண்டும்'' என்று எடுத்துச் சொன்னார்கள்.

"இந்தப் பொன்பாவை அவள் தின்ற மாங்காயை மீட்டும் உயிருமா?'' என்று இழிவு தொனிக்கக் கேட்டான் அரசன்.

"அந்தப் பெண்ணின் உயிர்கூட அந்தக் காயைத் தர முடியாதே!'' என்றார் அவையத்தார்.

"அந்த உயிரைக் கொண்டால், இனி இத்தகைய குற்றம் நடவாது!'' என்று கோபத்தோடு பேசினான் நன்னன்.

"இந்தப் பாவையை ஏற்றுத் தண்டனையை மாற்றினால் நாடு அரசர்பிரானைப் போற்றும். மன்னர்பிரானுடைய கருணையின் உயர்வை அறிந்து குடிமக்கள் வாழ்த்துவார்கள்.''

"இல்லாவிட்டால்?''

"அதை நாங்கள் சொல்வானேன்? புலவர்களைப் பாதுகாக்கும் பெருங்குடியில் வந்த பெண் அவள்.''

"புலவர்கள் இச்சகம் பேச, மகிழ்ந்த குடிபோலும்!''

"அரசே, புலவர்களை இழித்துப் பேசுவது தமிழ் மகனுக்கு அழகன்று.''

"குற்றம் செய்த குடிக்கு வேண்டியவர்களென்று நீங்கள் சொன்னீர்களே!''

"அது அல்ல, நாங்கள் சொன்னது. புலவர்கள் இந்த நாட்டுக்கு மாத்திரம் உரியவர்கள் அல்ல. அவர்களுக்கு யாதும் ஊர்; யாவரும் கேளிர். அவர்கள் உள்ளம் புண்

படும் செயல் இது. இதன் விளைவு அரசர் பிரானது புகழுக்கு மாசாக முடியும்.''

அதற்குள் இன்னும் சிலர் அங்கே வந்தார்கள். பொற்பாவையைத் தண்டமாக இறுப்பதோடு யானைகளையும் கொடுப்பதாக அவர்கள் சொன்னார்கள். புலவர்களும் சான்றோர்களும் சேர்ந்து இதை ஏற்பாடு செய்தார்கள். நன்னன் கொடியவனென்பதை அறிந்தவர்களாகையால், வழக்கம்போலப் பொற்பாவை கொடுப்பதோடு, மேலும் அபராதம் செலுத்த முன் வந்தார்கள். புலவர் பெற்ற யானைகளைத் தொகுத்தார்கள். புதிய பரிசிலும் பெற்றுக் கொணர்ந்தார்கள். எண்பத்தொரு யானைகள் சேர்ந்தன.

பெண் கொலைக்கு உலகமே அஞ்சியது. புலவர் உலகம் மிக அஞ்சியது. எப்படியாவது அதை மாற்றவேண்டுமென்று நல்லிசைச் சான்றோர் முனைந்து நின்றனர்.

நன்னனை அணுகினர் புலவர் சிலர். "அரசே, பொற்பாவை அவள் குற்றத்துக்கு ஈடு; எண்பத்தொரு யானைகள் மன்னர்பிரானது கருணைக்குக் காணிக்கை" என்று சொன்னார்கள்.

"இதென்ன விளையாட்டு? குற்றம் செய்தவரைத் தண்டிப்பது அரசன் கடமை. குற்றவாளியின் சார்பில் நிற்பவர்கள் குற்றத்திற்குத் துணை செய்பவர்களாவார்கள். புலவரானாலும் சரி, அவையத்தாரானாலும் சரி, அவர்கள் தங்கள் பெருமைக்கு இழுக்கைத் தேடிக்கொள்கிறார்கள். உலகமே எதிர்த்து நின்றாலும் இந்தத் தண்டனையை மாற்ற மாட்டேன். பொன்னைக் கண்டும் யானையைக் கண்டும் மயங்கிவிட நான் என்ன சிறுபிள்ளையா?''—அரசன் எழுந்து போய்விட்டான்.

"அட படுபாவி!" என்றே ஒவ்வொருவர் வாயும் முணுமுணுத்தது.

புலவர் உள்ளம் மறுக, சான்றோர் முகம் வாட, குடிமக்கள் புலம்ப நன்னன் பெண் கொலை செய்துவிட்டான்; தண்டனையை நிறைவேற்றினன். அன்றுமுதல் அவனைப் பழி சூழ்ந்தது.

பெண்ணுக்குப் பரிந்து எழுந்த புலவர் உலகம் அதற்குப் பழி வாங்க நினைந்தது. "இனி இவன் முகத்தையும் பாரோம். இவனைப்பற்றி ஒரு வார்த்தை பேசமாட்டோம். அப்படி இவனைப் பற்றிச் சொல்லவேண்டுமானல் கடுஞ் சொல்லால் இவன் பழியைப் பாடுவோம். இவன் மரபிலே பிறந்தவர்களையும் எமக்குப் பின்வரும் புலவர் பாடாதொழிக! பெண்கொலை புரிந்த நன்னனுக்கு இனி உய்வில்லை. உலகில் பழி சேரும். மறுமையில் நரகந்தான் கிடைக்கும்" என்று கூடிப் பேசினர். "நம்முடைய செந்நாவை நன்னனைப் பாடி மாசுபடுத்த மாட்டோம்!" என்ற விரதம் பூண்டனர்.

## 5

இரக்கம் இன்றிப் பெண்கொலை செய்த கொடியவன், போலி நீதி பேசிய புல்லன், புலவர் சாபத்துக்குட்பட்ட பாவி என்று உலகம் நன்னனைக் கூறத் தொடங்கியது. அவன் அதிக காலம் வாழவில்லை. சில ஆண்டுகளுக்குள், கோசர் என்ற வீரர் அந் நாட்டின்மேல் படையெடுத்து நன்னனைக் கொன்று, அவன் மாமரத்தையும் வெட்டினர். அவன் உலகிலிருந்து போனலும் அவன் பழி போகவில்லை. யாரையாவது வைவதாக இருந்தால், "நன்னனுக்குக் கிடைத்த நரகம் உனக்குக் கிடைக்கட்டும்" என்று வைதனர் தமிழ் மக்கள்.

நன்னன் செய்த கொலைப்பாவம் அவனுக்கு நரகமும் பழியும் வாங்கித் தந்தது பெரிதல்ல; அவன் பரம்பரையிலே பிறந்தவர்களையும் அது தாக்கியது.

இளவிச்சிக்கோ என்பவன் நன்னன் வழி வந்தவன். அவனும் இளங்கண்டீரக்கோ என்பவனும் ஓர் இடத்தில் இருந்து பேசிக்கொண்டிருந்தனர். அப்போது பெருந்தலைச் சாத்தனார் என்ற புலவர் அங்கே சென்றார். சென்று இளங்கண்டீரக்கோவை மாத்திரம் தழுவி ஆசி கூறி அமர்ந்தார். இளவிச்சிக்கோ, தன்னை அவர் தழுவாததற்குக் காரணம் தெரியாமல் விழித்தான். "நான் என்ன குறை உடையேன்?" என்று அவன் புலவரைக் கேட்டான்.

"இவன் பரம்பரையாகப் புலவரைப் பாதுகாப்பவன். வீட்டிலே ஆடவர் இல்லாமற் போனாலும், மகளிர் வந்தவரை உபசரித்துப் பரிசில் தந்து புகழ்பெறுவது இவன் குலம். அதனால் இவனைத் தழுவினேன். உன் குலத்தைப் பற்றி நான் என்ன சொல்வது? பெண்கொலை புரிந்த நன்னனின் வழி வந்தவன் நீ. புலவரை அவமதிப்பதில் சிறந்த குடியிலே பிறந்தவன். புலவர்கள் புகாத வீடு உங்கள் வீடு. அதனால் உங்களை எங்கள் கூட்டத்தார் பாடுவதை விட்டுவிட்டார்கள்" என்று அவர் சொல்வதைக் கேட்டு இடிவிழுந்து போனான் இளவரசன்.

நன்னன் பூண்ட பழியும் புலவர் இட்ட சாபமும் நன்னனோடு நில்லாமல் அவன் பரம்பரையையும் சுட்டன.

## சோறு அளித்த சேரன்

"எங்கிருந்து வருகிறீர்கள்?"

"தமிழ் நாட்டிலிருந்து."

"அப்படியா? மகாபாரத யுத்தத்தில் பாண்டவர் படைக்கும் கௌரவர் படைக்கும் குறைவில்லாமல் உணவு கொடுத்த தமிழ்நாட்டிலிருந்தா?"

"ஆம்."

"உங்கள் அரசன் மகா தாதாவாக இருக்கிறனே."

"அவன் பரம்பரையே அப்படித்தான்.

"**உதியஞ் சேரலாதன்** என்ற பெயரை நாங்கள் அறிவோம். ஆனல் அவன் இயல்பு ஒன்றும் எங்களுக்குத் தெரியாது."

"அவன் எல்லாக் குணங்களிலும் சிறந்தவன்."

இவ்வாறு பேசிக்கொள்பவர்களில் ஒருவர் தமிழ் நாட்டார், மற்ருெருவர் வடநாட்டார். வடநாட்டில் உள்ள முரஞ்சியூர் என்ற ஊரிலே பிறந்த நாகராயர் என்ற புலவர் வடநாட்டு யாத்திரை செய்யலானர். புலவர்களிலே சிறந்தவர்களுக்கு அரசர்கள் முடியணியும் சிறப்பை வழங்குவார்கள். அந்தச் சிறப்பைப் பெற்றவர் நாகராயர். ஆதலின் அவரை முரஞ்சியூர் முடி நாகராயர் என்று தமிழ்நாட்டார் வழங்குவார்கள்.

பாரத யுத்தம் நடந்து முடிந்த காலம் அது. அந்தப் பெரும்போரில் குருக்ஷேத்திரத்தில் எல்லா நாட்டு

மக்களும் இருகட்சிகளிலும் சேர்ந்து போரிட்டனர். போர் நிகழ்ச்சியினால் வேளாண்மை முதலிய முயற்சிகள் சுருங்கின. பதினெட்டு நாள் போராடினாலும் அதற்கு முன்னே பல பல ஏற்பாடுகள் நடந்தமையால் இந்த நிலை வந்து விட்டது. போர், அறப்போராக, சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு நடைபெற்றது.

பாரதப் போரில் ஈடுபட்ட வீரர்களுக்கு உணவு போதாது என்ற செய்தி தமிழ்நாட்டு மன்னன் காதுக்கு எட்டியது. தமிழ் வீரர்களிலே சிலரும் பாரதப் போரில் ஈடுபட்டிருந்தனர். அக்காலத்தில் தமிழ்நாட்டின் பெரும் பகுதியை உதியஞ் சேரலாதன் என்ற சேர மன்னன் ஆண்டு வந்தான். தமிழ்நாடு நெல்லும் கரும்பும் விளையும் நாடு. பாரதப் போர் வீரர்களுக்கு அரிசி அனுப்பும் காரியத்தைச் சேர மன்னன் மேற்கொண்டான். ஒரு கட்சியினருக்குத்தான் உணவு தருவேன் என்று சொல்லவில்லை. தர்ம யுத்தத்தில் தர்ம நெறியுடையார் வெல்வார் என்ற உறுதி யாவருக்கும் இருந்தது. பசித்தவன் யாராக இருந்தாலும், பகைவனாக இருந்தாலும் அவன் பசியைப் போக்குவது அறமென்பது சான்றோர் கொள்கை.

சேரலாதன் இத்தகைய உள்ளம் படைத்தவன். இருவகைப் படைக்கும் போதிய உணவு அளிப்பதே தன் கடமை என்று உணர்ந்து, போர் முடியும் வரைக்கும் அப்படியே செய்துவந்தான். இந்தப் பெருஞ் செயல் காரணமாக அவன் புகழ் பாரத நாடு முழுவதும் பரவியது. பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன் என்று அவனை யாவரும் வழங்கலாயினர். முரஞ்சியூர் முடிநாகராயர் வடநாட்டு யாத்திரையில் வடநாட்டுப் பெருமையை உணர்ந்ததோடு அங்குள்ளார் தமிழ் மன்னன்

வண்மையைப் போற்றக் கேட்டு அம்மன்னன் பெருமையையும் நன்கு உணர்ந்தார்.

வடநாட்டில் அவரிடம் சேரனைப்பற்றிய செய்திகளை ஆவலோடு பலரும் கேட்கலாயினர்.

"உங்கள் நாட்டில் போரே இல்லையா ?"

"இல்லை. பகைவரே இல்லை. அதனால் போரும் இல்லை."

"அது எப்படிச் சாத்தியம் ஆகும்?"

"எங்கள் அரசனுடைய இயல்புகள் பகையில்லாமற் செய்துவிடுகின்றன. அப்படிச் சிறு பகை எங்கேனும் இருந்தால் அவர்களை ஒடுக்கும் படைவன்மை எங்கள் அரசனுக்கு உண்டு."

"பகைவர் இல்லாமல் ஒரு நாடு இருக்க முடியுமோ ?"

"பகைமை கொண்டு எவரேனும் தவறு செய்தால் சிறு தவறு காரணமாகப் பெரிய போரைத் தொடங்குவது எங்கள் மன்னன் வழக்கம் அன்று. அப்பகைவரைப் பொறுத்தருள்வான். போற்றுரைப் பொறுக்கும் திறத்தில் அவன் பூமிக்குச் சமானம் ஆனவன்."

"அவன் பொறுமையுடையவனாக இருக்கலாம். ஆனால் பகைவர் செய்யும் தீங்கு மிகுதியாகிவிட்டால் அரசனாக இருப்பவன் சும்மா இருக்கலாமா ?"

"அளவுக்கு மிஞ்சிப் போனால் உடனே போரைத் தொடங்க மாட்டான். ஒன்றும் செய்யாமல் வாளா இருக்கவும் மாட்டான். 'எப்படிப் போர் நடத்தலாம்? பகைவரை அடக்குவது ஒன்றுதான் நம் இலக்கு. அதற்கு ஏற்ற தந்திரங்கள் எவை? நாட்டுக்கு அதிக ஊறுபாடு

நிகழாமல் போரிட வழி என்ன?' என்றெல்லாம் அமைச்சர்களுடன் விரிவாக ஆராய்வான்."

"செயலில் முனையாமல் ஆராய்ந்து சூழ்ந்து என்ன பயன்?"

"பலஹீனர் செய்யும் ஆராய்ச்சி அல்ல இது. பலமுடையவன் நாடு வாழவேண்டும் என்னும் நோக்கத்தோடு தீர ஆராயும் சூழ்ச்சி இது. அவன் தனி மனிதன் என்ற நிலையில் உறுதி குலையாத மனத்திண்மை படைத்தவன். அரசனென்ற வகையில் வீரமும் வன்மையும் உடைய படைகளைப் பெற்றவன். சூறுவளிக் காற்றைப் போன்ற வலிமை அது. அதன்முன் எந்தப் படையும் நில்லாது."

"இவ்வளவு பலமுடையவன் காலத்தைப் போக்கிக் கொண்டே இருப்பானு?"

"அதுதான் இல்லை. பகைவர்களின் குறும்பு தனக்குத் தெரியும் என்பதைக் காட்டிப் பொறுமையை மேற்கொள்ளும்போது பலர் தம் பகைமையை விட்டொழிப்பர். போருக்கு வேண்டிய யோசனை செய்கிறுன் என்ற அளவில் பகைவர் பலர் அஞ்சி ஒடுங்குவர். பின்னும் முனைபவர்கள் அரசனது படை வன்மையைக் கண்டு பேதுறுவர். அதுவும் செய்யாது போருக்கு எழுபவரை அழிப்பதில் அக்கினியைப் போன்றவன் மன்னன். எத்தகைய படையாக இருந்தாலும் பொடியாக்கி விடுவான்."

"எல்லோரையும் போலப் பகையை அடக்கும் அரசன்தானே அவன்?"

"அல்ல, அல்ல. போர்மூண்ட பின்னரும் தம் பிழையை உணர்ந்து வழிபடும் பகைவர்களை, நீரைப்

போலக் குளிர்ந்த உள்ளத்தோடே ஏற்றுக்கொண்டு நன்மை செய்யும் உத்தமன் அவன்.''

"ஆ! எங்கும் கேளாத பெருமையாக அல்லவா இருக்கிறது? உலகமெல்லாம் ஐந்து வகையான பூதத்தின் சேர்க்கை என்று சொல்கிறார்கள். உலகத்தைக் காக்க வந்த உங்கள் அரசனும் ஐம்பூத இயற்கையும் உடையவனாக இருக்கிறான். நிலத்தைப் போன்ற பொறையும், விசும்பைப் போன்ற சூழ்ச்சியும், வளியைப் போன்ற வலியும், தீயைப் போன்ற தெறலும், நீரைப் போன்ற அளியும் அவன்பால் இருக்கின்றன என்று தெரிகிறது. அவன் நாட்டின் விரிவு எப்படி?''

"அவன் அன்பு நிறைந்த ஆட்சியில் சூரியன் மகிழ்கிறான். அவனுக்குரிய கீழ்கடலிலே உதயமாகி, அவனுக்குரிய மேல் கடலிலே மறைகிறான்.''

"இரு கடலுக்கும் இடைப்பட்ட நாடென்று சொல்கிறீர்கள். அவன் நாட்டு வளப்பம் எங்களுக்குத் தெரிந்ததே. அவன் புகழை வடநாட்டார் அறிந்தது கிடக்கட்டும். போரில் மாய்ந்து வீர சுவர்க்கம் புக்கவர்கள் வானத்தில் அவன் புகழைச் சொல்லிக்கொண் டிருப்பார்கள். அவன் நாட்டுக்குக் கடல் வரம்பானாலும் அவன் புகழுக்கு வானந்தான் வரம்பு.''

"ஆம், வானவரம்பன்தான் எங்கள் மன்னன்.''

"பஞ்சபாண்டவர்களோடு நூற்றுவராகிய துரியோதனாதியர் போட்ட சண்டையில் அந்த நூற்றுவரும் அழிந்தொழிந்தார்கள். அதர்மம் தோற்றது. அவர்கள் அழியும் வரைக்கும் இரு படைக்கும் கணக்கே யில்லாமல் சோறு வழங்கினான் உங்கள் அரசன். அவன் நீடூழி

வாழவேண்டும். பசுவின் பால் கறக்கும்போதே புளித்துப் போனாலும், சூரியனுக்குள் இருட்டுப் புகுந்தாலும் நான்கு வேதங்களின் நெறி பிறழ்ந்து போனாலும் தனக்கு உதவியாக நிற்கும் மாறா மனம் படைத்த மந்திரிகளோடே நடுக்கமில்லாமல் வாழ்வானாக! எங்கள் இமாசலம்போல் வாழ்வானாக!"

இந்த வாழ்த்துப் புலவர் காதிலே குளிர்ச்சியாக விழுந்தது.

"இமாசலம் போல நடுக்கமின்றி உங்கள் அரசன் வாழ்க!" என்று அந்தப் பெரியவர் சொன்னாரல்லவா? அதைக் கேட்டவுடன் புலவருக்கு இமாசல ஞாபகம் வந்தது. அந்த மாபெரு மலைக்குச் செல்ல அவா எழுந்தது. புறப்பட்டார். போனார். கண்டார்.

இமயமலையின் உன்னதத்தைக் கண்ணால் அளக்கமுடியுமா? பாரத நாட்டின் வடபேரெல்லையாக வானைநோக்கி நிமிர்ந்து நிற்கும் அந்த மலைச் சாரலிலே புகுந்து பார்த்தார். பல முனிவர்களின் ஆசிரமங்களை அடைந்து முனிவர்களைத் தரிசித்தார்.

ஆசிரமங்களில் இயற்கை எழில் தவழ்ந்தது. தவம் மலிந்திருந்தது. எல்லாம் அன்பு மயம். முனிவர் எரியோம்பும் வாழ்க்கையுடையவர். அந்த ஓமகுண்டத்தைச் சுற்றி இரவுக் காலத்தில் மடமான்கள் தங்கள் குட்டிகளோடு அச்சமின்றித் தூங்குகின்றன. அந்த முத்தீயாகிய விளக்குக்கு முன்னே புலி முதலிய விலங்கினங்கள் வாரா என்ற தைரியத்தோடு தம்மை மறந்து அவை துயில் புரிகின்றன. இந்தக் காட்சி முடிநாகராயருடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்டது.

காலையில் சூரியனது செங்கதிர் இமயத்தின் மேலே வீசியது; வானளாவிய அதன் சிகரம் பொன்னைப்போலப் பளபளத்தது. அதைப் பார்த்து வியந்துகொண்டே நின்றார் புலவர். "பொன்குவையே சிகரமாக அங்கே பொருந்தி நிற்கிறதோ ?" என்று ஐயுற்று நின்றார். ஒரு முனிவர், "அதற்குக் காஞ்சன சிருங்கம் என்று பெயர்" என்றார். புலவர், "பொற்கோட்டு இமயம்" என்று அப் பெரு மலையைப் போற்றினார்.

"ஆம், நம் மன்னன் இந்த இமாசலத்தைப் போன்ற உயர்வுடையவன் ; பரந்த உள்ளமுடையவன்; குளிர்ந்த உள்ளமுடையவன். இதைப்போல நடுக்கின்றி வாழ் வானாக!" என்று மனத்துள் வாழ்த்தினார்.

இமாசலத்தின் முன்னாலே அவருக்குத் தமிழ் நாட்டு நினைவு தோன்றியது. உருவத்தாற் சிறியவராயினும் வன் மையிற் பெரிய அகத்தியர், உருவத்தாற் சிறியதாயினும் புகழினாற் பெரிய பொதிகையில் இருக்கை கொண்டார். இமயமும் பொதியிலும் பெருமையால் ஒத்தனவே; பாரத நாட்டின் கலைத் திறத்தையும் தவச் சிறப்பையும் காக்கும் தம்பம்போல் இருக்கின்றன. இரண்டும் நடுக்கம் இல்லா தவை. பாண்டியன் இமாசலத்தைப்போல வாழவேண்டும். பொதியிலைப்போலவும் தமிழைப் பாதுகாத்து நடுக்கின்றி வாழவேண்டும்.

தமிழ்ப்புலவர் உள்ளம் இமயத்தையும் பொதியிலையும் இணைத்துப் பார்த்து மகிழ்ந்தது. இரண்டும் ஒரே சான் றாண்மைக்கு எல்லையாக நிற்பதை உணர்ந்தது. பாரத நாட்டின் சிறப்பையே அளந்து கண்டவர்போன்ற பெரு மிதம் அவருக்கு உண்டாயிற்று.

முரஞ்சியூர் முடிநாகராயர் தமிழ்நாட்டுக்கு மீண்டு வந்தார். உதியஞ் சேரலாதனைப் பார்த்துவிட்டுத்தான் மறு காரியம் செய்வதென்ற வேகம் இருந்தது அவருக்கு. மன்னனை அணுகினார்.

"புலவரே, வடநாட்டு யாத்திரை சுகமாக இருந்ததா? என்ன என்ன அதிசயம் கண்டீர்கள்?" என்று சேரன் கேட்டான்.

"எங்கும் சேரலாதன் பெருமையைத்தான் கேட்டேன். நீ வாழ்க!" என்று உணர்ச்சி மிகுதியால் பேசினார். அவர் உள்ளக் கருத்து, பாட்டாக வெளியாயிற்று.

மண்திணிந்த நிலனும் நிலன்ஏந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும் வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீரும் என்றாங்கு
ஐம்பெரும் பூதத்து இயற்கை போலப்
போற்றார்ப் பொறுத்தலும் சூழ்ச்சியது அகலமும்
வலியும் தெறலும் அளியும் உடையோய்,
நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்தும்நின்
வெண்டலைப் புணரிக் குடகடற் குளிக்கும்
யாணர் வைப்பின் நன்னாட்டுப் பொருந,
வான வரம்பனை நீயோ பெரும!
அலங்குளைப் புரவி ஐவரோடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருதுகளத்து ஒழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்,
பாஅல் புளிப்பினும் பகல் இருளினும்
நாஅல் வேத நெறிதிரியினும்
திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி
நடுக்கின்றி நிலீஇயரோ அத்தை! அடுக்கத்துச்
சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை
அந்தி அந்தணர் அருங்கடன் இறுக்கும்
முத்தீ விளக்கில் துஞ்சும்
பொற்கோட்டு இமயமும் பொதியமும் போன்றே.

[மண் அணுச் செறிந்த நிலமும், அந்த நிலத்திற்கு மேலே உயர்ந்த வானமும், அந்த வானத்தைத் தடவி வரும் காற்றும், அந்தக் காற்ருேடு சேர்ந்த தீயும், தீயை அவிக்கும் நீரும் என்று ஐந்துவகையான பெரிய பூதங்களது இயல்பைப்போல, பகைவர் தவறு செய்தால் அதைப் பொறுத்தலும், அளவுக்கு மேற்போனல் தண்டிக்கச் செய்யும் ஆராய்ச்சியின் விரிவும், அவர்களை அழிப்பதற் கேற்ற திடமும் படைப் பலமும், அவற்றைக்கொண்டு அவர்களை அழித்தலும், அவர்கள் வந்து பணிந்தால் இரங்கிக் காட்டும் கருணையும் உடையவனே! உனக்குரிய கடலிலே உதித்த சூரியன் உனக்குரிய கடலிலே குளிக்கும் எல்லையையும், புதிய புதிய விளைவையுடைய ஊர்களையும் பெற்ற நல்ல நாட்டுக்கு வேந்தே! வானத்தையே புகழுக்கு வரம்பாக உடையவன் நீபோலும்; பெருமானே, அசைகின்ற கவரியை அணிந்த குதிரையையுடைய பஞ்ச பாண்டவருடனே பகைத்து, பொன்னுலாகிய போர்ப் பூவாகிய தும்பையை அணிந்து துரியோதனன் முதலிய நூறு பேரும் பொருது போர்க்களத்தில் அழியும்வரையில், பெருஞ் சோருகிய மிக்க உணவை இரண்டு படைகளுக்கும் கணக்கில்லாமல் வழங்கினவனே! பால் புளித்துப் போனாலும், நான்கு வேதத்தின் வழியே நடைபெறும் ஒழுக்கம் வேறுபட்டாலும் வேறுபாடில்லாத ஆலோசனையைப் பெற்ற மந்திரிகளோடு நெடுங்காலம் விளங்கி, மலைச் சாரலில் குட்டிகளோடு பெரிய கண்ணையுடைய பெண்மான்கள் அந்திக் காலத்தில் அந்தணர் செய்யும் கடனாகிய ஹோமத்தைச் செய்யும் முத்தீயாகிய விளக்கிற்கு அருகில் துயிலும் பொற் சிகரங்களையுடைய இமய மலையையும் பொதிய மலையையும்போல நடுக்கம் இல்லாமல் வாழ்வாயாக!]

# உழுபடையும் பொருபடையும்

"அரசன் மிகவும் நல்லவன். ஆனால் அமைச்சர்கள் நாட்டு நலனைக் கருதுபவர்களாக இல்லை. அவனுடைய அருள் உள்ளத்தை நாமெல்லாம் நன்கு அறிந்திருக்கிறோம். பஞ்சம் வந்த காலத்தில் அரச பண்டாரத்தில் பொன் கடன் பெற்றோம். நம்முடைய நிலங்களை வளப் படுத்தும் பொருட்டே அப்படிப் பெற்றோம். அந்தப் பஞ்சத்தின் விளைவு இன்னும் முற்றும் நீங்கினபாடில்லை. கடனைக் கொடுப்பதென்றால் நிலத்தையே கொடுத்துவிட வேண்டியதுதான்" என்று குடிகள் தம்முள் பேசிக் கொண்டார்கள்.

"அரசர் நேரிலே இவற்றைக் கவனித்தால் நலமாக இருக்கும். அமைச்சர்கள், 'இப்போது நிலம் விளைகிறது; கடனைத் தண்டலாம்' என்று சொல்லி யிருக்கிறார்கள். அதனை உண்மையென்று கருதிய அரசர் கடனைத் தண்ட முயற்சி செய்கிறதாகத் தெரிகிறது" என்றும் பேசிக் கொண்டார்கள்.

கிள்ளிவளவன் என்ற சோழன் ஆட்சியிலே குடி மக்கள் நன்றாக வாழ்ந்து வந்தனர். இடையிலே மாரி பொய்த்துப்போய்ப் பஞ்சம் வரவே, நிலம் விளைவொழிந் தது. குடிமக்கள் துன்பத்துக்கு ஆளாயினர். அப்போது அரசன் வேளாளர்களுக்குப் பொன் கடன் கொடுத்து வேளாண்மை செய்யச் செய்தான்.

அக்காலத்தில் உணவுப் பண்டங்களை விற்றுப் பண மாக மாற்றி வைத்துக்கொள்ளும் வழக்கம் இல்லை. நாண

யத்திற்கு அதிகச் செலாவணி இராது. விளைந்த நெல்லைத் தமக்கும் தர்மத்துக்கும் பயன்படுத்திக்கொண்டனர் மக்கள். எஞ்சியதைக் கடனுக்காகக் கொடுக்கச் சோழ நாட்டுக் குடிமக்கள் எண்ணியிருந்தார்கள்.

சில அமைச்சர்களுடைய வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டு அந்தப் பழைய கடனை எப்படியாவது தண்டிவிட வேண்டுமென்று மன்னன் நிச்சயித்தான். அப்படிச் செய்வதாக இருந்தால் மக்கள் பட்டினி கிடக்க நேரும். இயற்கையாகப் பஞ்சம் இல்லாவிட்டாலும் செயற்கைப் பஞ்சம் வந்துவிடும். அதனால் குடிமக்கள் அஞ்சினர். அரசனை அணுகித் தங்கள் நிலையை எடுத்து முறையிடலாம் என்றாலோ அமைச்சரைக் கடந்து அவனைச் சேர்வது எளிதன்று.

இத்தகைய நிலையில் குடிமக்களுக்குச் சமய சஞ்சீவி போல நேர்பட்டார், தமிழ்ப்புலவர். வெள்ளைக்குடி என்ற ஊரிலிருந்து அரசனைப் பார்த்துவிட்டுப் போகலாமென்று வந்தார், அவர். அவருக்கு நாகனார் என்று பெயர். அவரிடம் குடிமக்கள் தங்கள் நிலையை எடுத்துச் சொன்னார்கள். "எப்படியாவது இதை அரசர் செவியில் ஏறச்செய்ய வேண்டும். அமைச்சர்கள் சுவரைப் போலச் சூழ உள்ளனர். அவர்களை ஊடுருவிக்கொண்டு செல்வது எங்களால் இயலாத காரியம். எங்கள் வாழ்வு உங்கள் வாக்கில் இருக்கிறது" என்று சொல்லி இரந்தனர்.

நல்ல காரியங்களைச் செய்வதில் முன்நிற்பவர் புலவர். நாடு வளம்பெற வேண்டுமானால் உழவர் சிறக்கவேண்டும். ஆகவே அவர்கள் குறையை அரசனுக்குத் தெரிவிப்பது தம்முடைய இன்றியமையாத கடமையென்று உணர்ந்து

எப்படியாவது அவர்கள் காரியத்தை நிறைவேற்றிவிட உறுதி பூண்டார்.

"சோழ நாட்டின் பெருமையை என்னவென்று சொல்வது! தமிழ் நாட்டுப் பேரரசர் மூவர். அந்தத் தண்டமிழ் அரசர் மூவருக்குள்ளும் அரசு என்பதற்குரிய இலக்கணங்களெல்லாம் நிரம்பியவன் நீதான். சோழநாடு வளத்திலே சிறந்தது. மழையில்லாமல் பிற நாடுகளெல்லாம் பஞ்சத்தால் துன்புறும் காலத்திலும் காவிரி வற்ருமல் ஓடுவது. அதன் நீரால் சோழநாடு வளம் பெறுகிறது. வேற்று நாட்டான் ஒருவன் இந்த நாட்டுக்கு வந்து பார்த்தால், இங்கே காடுபோலப் பரந்திருக்கும் கரும்பைக் கண்டமாத்திரத்திலே இந்த நாட்டின் செழிப்பை உணர்ந்துகொள்வான். வறுமைப் பகைவனை வதைக்கும் வேலைப்போல வெள்ளைப் பூவோடு தலை நிமிர்ந்து நிற்கும் கரும்பின் காட்சியே காட்சி!"—இவ்வாறு நாயனார் சோழ நாட்டின் வளத்தை எடுத்துச் சொல்லச் சொல்லக் கிள்ளிவளவன் கேட்டுக்கொண்டே வந்தான்; கேட்கக் கேட்க அவன் உள்ளம் பெருமிதம் அடைந்தது.

"இத்தகைய செல்வமிக்க நாட்டுக்கு அரசனாக இருக்கும் உனக்கு ஒன்று கூற விரும்புகிறேன்" என்று புலவர் நிறுத்தினார்.

"அப்படியா! சொல்லுங்கள் கேட்கிறேன். என்னால் ஆகவேண்டியது எதுவானாலும் செய்கிறேன்" என்றான் அரசன்.

"காவிரிக்கு நீர்வளம் மழையால் உண்டாகிறது. நாம் நினைத்தபோது நினைத்த காரியத்தை ஓரளவுதான் செய்ய முடியும். சில காரியங்கள் நம் கையில் இல்லை. மழை

பெய்யவேண்டுமென்று நாம் எண்ணினால் அது உடனே பெய்யாது. ஆனால் அரசர்கள் மழையைப் பெய்யும்படி செய்வார்கள்."

"அது அப்படி முடியும்?"

"செங்கோல் செலுத்தும் வேந்தர்கள் அறம் புரிவார்கள். குடிமக்களுக்கு எளியராக இருப்பார்கள். குடிகளுக்கு ஏதேனும் குறையிருந்தால் அவர்கள் அதை முறையிடுவதற்கு வருவார்கள். அந்த முறையீட்டைக் கேட்பதற்குச் சித்தராக இருக்கும் அரசர்கள் எப்போது மழை வேண்டுமென்று விரும்பினாலும் பெய்யும் என்று பெரியோர் கூறுவர். முறை வேண்டும்பொழுது முன்னிற்கும் அரசர் உறை (மழைத்துளி) வேண்டும்பொழுது மழையும் முன்னிற்குமாம்."

அரசன் யோசனையில் ஆழ்ந்தான். சில நாட்களாகத் தன்னைப் பார்க்கவேண்டுமென்று சில குடிமக்கள் விரும்பியபொழுது, அமைச்சர்களை விட்டு விடை சொல்லி அனுப்பியது அவன் ஞாபகத்துக்கு வந்தது.

"அரசன் ஒவ்வொரு கணமும் குடி மக்களுக்காக உயிர் வாழுகிறான். அவன் பிடிக்கும் குடை மற்றவர்கள் வெயிலுக்குப் பிடிக்கும் குடையைப் போன்றதன்று. தன்னுடைய அருளினால் குடிமக்களையெல்லாம் அரவணைத்துப் பாதுகாப்பதற்கு அடையாளம் அது. வெயில் மறைக்க நிற்பதன்று அந்தக் குடை; வருந்திய குடி மறைப்பது."

அரசனுக்குப் புலவர் பேச்சுக்குள்ளே தனக்கு அறிவுரை ஒன்று இருப்பது தெரிந்தது. தன்னுடைய கடமையை அவர் எடுத்து வற்புறுத்தவே வந்திருக்கிறார் என்பதையும் தெரிந்துகொண்டான்.

"கூர்வேல் வளவ, அரசர்கள் படைகளைத் திரட்டிப் பகைவர்களோடு பொருது வெற்றி பெறுகிறார்கள். பெரிய பெரிய படைகளையெல்லாம் பாதுகாத்து வெற்றி அடைவது எதனாலே? உழுபடையால் விளைந்த விளைவின் பயன் அது. உழவர் உழுது நெல்விளைக்க, அதனைக் கொண்டு வீரர்களைப் பாதுகாக்கிறான் அரசன். அவர்களுக்கு உணவு இல்லாவிட்டால் படை ஏது? வெற்றி ஏது? உழுபடையின் சாலிலே விளைந்த நெல்லைக் கொண்டுதான் பொரு படையின் போரிலே விளைந்த வெற்றியைப் பெறவேண்டும். உலகத்தில் பஞ்சம் தோன்றினாலும் இயற்கையல்லாத உற்பாதங்கள் நிகழ்ந்தாலும் அரசர்களைத்தான் மக்கள் பழிப்பார்கள். ஆகையால், அரசனாக இருப்பவன் நியாயம் வழங்க எப்போதும் சித்தனாக இருக்கவேண்டும். படை வீரர்களைப் பாதுகாப்பதைக் காட்டிலும் பெரிதாக எண்ணி உழவர்களைப் பாதுகாக்க வேண்டும்."

"புலவர் பெருமானே, என்னிடம் குறையிருந்தால் குறிப்பாகச் சொல்லாமல், நேராகவே சொல்லலாம்" என்று அரசன் முகம் நிமிர்ந்து சொன்னான். அவன் குரலில் பச்சாத்தாபம் தொனித்தது.

"சொல்கிறேன். நான் சொன்ன உண்மைகளை மனம் கொண்டாயானால், மற்றவர்கள் கூறும் வார்த்தைகளைச் செவியிலே கொள்ளக்கூடாது. நாலுபேர் நாலு கூறுவார்கள். அரசன் உண்மையை நேரிலே கேட்டு உணர வேண்டும். குடிமக்களுடைய குறையை உணரும் விஷயத்தில் நடுவில் அயலாருக்கு என்ன வேலை? தாய்க்கும் பிள்ளைக்கும் இடையே அன்பை வாங்கிக்கொடுக்கக் கையாள் எதற்கு? நீ அத்தகையவர்களின் புல்லிய வார்த்தைகளைக் காதிலே வாங்கவே கூடாது. எருதுகளைப் பாதுகாத்து

நிலத்தை வளப்படுத்தும் குடியானவர்களின் பாரத்தை நீதான் தாங்கவேண்டும். அவர்களால்தான் நாடு வளம் பெறுகிறது; படை பலம் பெறுகிறது; அரசன் புகழ் பெறுகிறான். இதனை நன்கு உணரவேண்டும். குடிகளின் குறையை உணர்ந்து நீ பாதுகாப்பாயானால், பகைவர்கள் யாவரும் உன் பெயரைக் கேட்டாலே நடுங்குவார்கள். காணிக்கையுடன் வந்து உன் காலில் விழுவார்கள். இதற்கு வழி உன் குடிமக்களை நீயே நேரில் கண்டு குறைகேட்டுப் பாதுகாப்பதுதான்.''

அரசன் முகத்தில் சோகம் தேங்கியிருந்தது. புலவர் பேச்சை முடித்தார். அவன் ஒருவாறு புன்னகையை வருவித்துக்கொண்டான். ''புலவரே, வணக்கம். உங்கள் பொன்னுரை என்னை விழிப்படையச் செய்தது. உங்கள் குறிப்பை உணர்ந்துகொண்டேன். நான் குடிமக்களைப் புறக்கணித்தேன். இனி அப்படிச் செய்யேன். அவர்களை அரசாங்கக் கடனிலிருந்து விடுதலை செய்துவிட்டேன். இதை முரசறைந்து தெரிவித்துவிடுகிறேன். சோழ நாடு வளம் பெறட்டும். உங்களைப் போன்ற புலவர்களால் அறிவு வளமும் பெருகட்டும்'' என்று தழுதழுத்த குரலோடு சொன்னான்.

பழஞ்செய்க்கடனிலிருந்து குடி மக்கள் விடுதலை பெற்றனர். கோள்சொல்லும் குண்டுணிகளாகிய அமைச்சரினின்றும் அரசனும் விடுதலை பெற்றான். இந்த இரண்டுக்கும் காரணமாயிருந்த புலவர் வெள்ளைக்குடி நாகனார் பெருஞ் சிறப்புப் பெற்றார்.

# கலக்கமும் தெளிவும்

**பா**ண்டிய மன்னர் பலரும் தங்கள் தங்கள் ஆற்றலாலும் அருங்கொடையாலும் அறிவுச் சிறப்பாலும் பெரும் புகழை அடைந்து விளங்கினவர்களே. ஆனாலும், முதுகுடுமிப் பாண்டியன் தனக்கெனச் சிறப்பான கீர்த்தியைத் தேடிக்கொண்டவன். வழுதியர் வம்சத்தில் அவன் சிறந்தோர் வரிசையிலே எண்ணுவதற்கு உரியவன். ஆகவே, அவனைப் பாண்டியன் என்றோ வழுதி யென்றோ சொல்லாமல் பெருவழுதி என்று மக்கள் அனைவரும் வழங்கினர். முதுகுடுமிப் பெருவழுதியின் புகழ் இந்த அளவோடு நிற்கவில்லை. அவனுடைய வீரச் செயல் இமயம் முதல் குமரி வரையில் அவனுக்குப் புகழை உண்டாக்கியது. அவன் செய்த புண்ணியச் செயல்களோ பூவுலகத்துக்கு மேலும் கீழும் பரந்து புகழை உண்டாக்கின. தேவர்களுடைய உள்ளம் உவக்கும் செயல்களைத் தக்காரைக் கொண்டு செய்வதில் அவன் ஈடுபட்டான். மக்கள் இனிது வாழ்வதற்கேற்ற யாகங்களைச் செய்வித்தான். அங்கங்கே வேள்விகள் நிகழும் யாகசாலைகளைப் புரக்கும் பெரு வண்மையை உடைய அவனை, பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி என்று யாவரும் சொல்லிப் பாராட்டினார்கள்.

நல்லவர்களையும் வீரர்களையும் பாடுவதற்கு வாயூறிக் கிடக்கும் புலவர்கள் பலர் முதுகுடுமியின் புகழைப் பாடினர். அப்படிப் பாடும்பொழுது ஒருவர் சொன்னவாறே சொல்லாமல் புதிய புதிய விதமாகச் சொல்ல முனைந்தனர். அவனுடைய வீரச் செயல்களும், அறச் செயல்களும் பல

என்பதை யாவரும் உணர்வர். அவற்றை ஒவ்வொன்றாக அடுக்கிச் சொன்னாலே ஆயிரம் பாட்டாகும். அது போதுமா? விஷயத்தைச் சொல்வது பெரிதல்ல; அதைச் சொல்லும் தோரணைதான் பெரிது. அந்தத் தோரணையிலே நயமும் சுவையும் இருக்க வேண்டும். கவிஞனுடைய ஆற்றல் சிறப்பாக இருந்தால், எத்தனை தடவை ஒரே விஷயத்தைச் சொல்வதாக இருந்தாலும் வெவ்வேறு அழகோடு சொல்ல முடியும்.

காரிகிழார் அத்தகைய ஆற்றலுள்ள புலவர். முதுகுடுமியின் புகழ் எங்கும் பரவியிருப்பதை நன்றாக உணர்ந்தவர். அவன் புகழைத் தெரிந்தவர்கள் அவனுடைய பாராட்டில் இன்பம் காணலாம். அவன் புகழை அறியாதவர்கள்கூடப் பாட்டின் இனிமையிலே ஆழவேண்டுமென்று அவர் நினைத்தார்.

முதுகுடுமி தெய்வ பக்தியிலே சிறந்தவன். முக்கட் பிரானாகிய சிவபெருமானிடம் உறுதியான அன்பு பூண்டவன். அப் பிரானது திருக்கோயிலை வலஞ்செய்யும் வழக்கம் உடையவன். வேத வேள்வியினிடம் நம்பிக்கை உடையவன். எரியோம்பும் அந்தணர்களை வணங்குபவன். அவர்களுடைய ஆசியை விரும்புகிறவன். வீரத்திலோ, அவன் செயலை அளவிட்டுச் சொல்லமுடியாது. அவனுடைய ஆணைக்கு அடங்க மறுத்த நாடுகள் என்ன ஆயின, தெரியுமா? தீக்கடவுளின் ஆட்சியை அங்கே நிறுத்தும் நெடுஞ்சினத்தை உடையவன் அவன். வீரம் உள்ள இடத்தில் காதல் சிறக்கும். ஆகவே அவன் காதல் இன்பத்திலும் திளைத்தான். கற்புடைய மடமங்கையர் பலருக்குக் கணவனாக இருந்தான்; அவருடைய காதல் இன்பத்தை நன்கு நுகர்ந்தான். அவனிடம் அறச்செயல்

சிறந்து நின்றது; பொருளிலும் அவன் சிறந்து விளங்கினான்; இன்ப நிலையில் உயர்ந்தோங்கினான்; வீட்டு நெறியையும் மறவாமல் கடவுளிடம் அன்பு பூண்டொழுகினான்.

இவற்றை யெல்லாம் காரிகிழார் நன்றாக உணர்ந்து கொண்டவர். அவருக்குத் தமது சாதுரியத்தால் சிறிது நேரம் அமைச்சரையும், புலவரையும், அரசரையுங்கூடக் கலக்கமடையச் செய்யவேண்டுமென்ற எண்ணம் உண்டாயிற்று. அதை நிறைவேற்றும் சமயத்தை எதிர் பார்த்திருந்தார்.

## 2

அரசவையில் அன்று பெருங்கூட்டம். திருக்கோயில்களிலிருந்து இறைவன் திருவருட் பிரசாதத்தை ஏந்தி வந்த பெரியார் பலர் அங்கிருந்தனர். வேள்விகளை முடித்துக்கொண்டு, அவை நிறைவேற உறுதுணையாக இருந்த மன்னனை நேரிலே கண்டு ஆசிகூற அந்தணர் பெருமக்கள் பலர் வந்திருந்தனர். பாண்டிய மன்னனது ஆணைக்கு அடங்கி ஒழுகுவதாக முறியெழுதிக் கொடுத்த மன்னர்களின் பிரதிநிதிகள் பலர் அங்கு அமர்ந்திருந்தனர். அரசனுக்கு உறவினர்களும் அமைச்சர்களும் நண்பர்களும் குடிமக்களில் தலைவரானவர்களும் விஜயம் செய்திருந்தனர். ஆடல் மகளிரும் பாடற்பாணரும் கூடியிருந்தனர். செந்தமிழ்ச் சான்றோராகிய புலவர் பலர் வீற்றிருந்தனர். அந்தப் புலவர் கூட்டத்திடையே காரிகிழாரும் அமர்ந்திருந்தார்.

அங்கே நடந்த பேச்சு அவ்வளவும் அரசனுடைய பலவகைப் புகழைப் பற்றியதாகவே இருந்தது.

"இந்த அரசர் புகழ் இமயத்துக்கு வடக்கிலும், குமரிக்குத் தெற்கிலும், கீழ் கடலுக்குக் கிழக்கிலும், மேல் கடலுக்கு மேற்கிலும் பரவி நிற்கிறது" என்றார் ஒருவர்.

"அந்த எல்லை இந்த உலகத்தளவிலே அமைந்ததல்லவா? மன்னர்பிரான் புகழ் மூன்று உலகத்திலும் பரவியதாயிற்றே! பூலோகத்தின் கீழே பாதாள லோகத்திலும் இவர் புகழ் பரவியிருக்கிறது. மேலே கோலோகத்தளவும் சென்றிருக்கிறது" என்றார் மற்றொருவர்.

"எங்கே போனாலும் நம் மன்னர் பிரானுடைய ஆணை கண்டு அச்சமும், ஆற்றல் கண்டு புகழும் நிறைந்திருக்கின்றன" என்று சுருக்கமாகச் சொன்னார் ஒருவர்.

"சக்கரவர்த்தியின் செங்கோலுக்கு அஞ்சுவார் அஞ்சுக. அது எப்போதும் துலாக்கோலைப்போல நடுநிலையிலே நிற்பது. நியாயப்படி நடப்பவர்கள் அதற்கு அஞ்ச வேண்டுவதில்லை" என்று வேறொருவர் தம் கருத்தை உரைத்தார்.

"நம் அரசர் பகைவரை வெல்ல வெல்லப் பரிசிலருக்குத்தான் யோகம். எவ்வளவு நாடுகளை இப்பெருமான் அடக்கினாலும், அவற்றால் வரும் பொருளைப் புலவருக்கும் பாணருக்கும் கூத்தருக்கும் வாரி வழங்குவதன்றி, தமக்கென்று அதைப் பயன்படுத்திக் கொள்வதில்லையே!" இப்படி ஒரு பெரியவர் பாராட்டினார்.

"பரிசிலருக்கு வழங்குவது கிடக்கட்டும். எல்லோரும் வழங்குவார்கள். ஆனால், வரிசை அறிந்து வழங்கும் பெருமை இருக்கிறதே, அதைச் சொல்லுங்கள். பரிசில் மாக்கட்கு வரிசையின் நல்கும் பண்பைப் பாராட்டுங்கள்" என்று எழுச்சியோடு பேசினார் ஒரு புலவர்.

அதுவரையில் பேசாமல் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த காரிகிழார் சற்றே நிமிர்ந்து உட்கார்ந்தார். அவர் ஏதோ சொல்லப்போகிறாரென்று அருகில் உள்ளவர்கள் எதிர்பார்த்தார்கள். ஆண்டில் முதிர்ந்த சான்றோர் ஒருவர், "காரிகிழார் ஒன்றும் பேசவில்லையே! ஏதாவது சொல்லக்கூடுமென்று எதிர்பார்ப்பவர்கள் இந்தக் கூட்டத்தில் பல பேர் இருக்கிறார்கள்" என்றார்.

காரிகிழார் பேசத் தொடங்கினார்.

## 3

"நம்முடைய சக்கரவர்த்தியைப் பற்றி இவ்வளவு அறிஞர்கள் பேசிய பிறகு நான் என்ன சொல்லப்போகிறேன்! அப்படி ஏதாவது சொன்னாலும், என் மடமையை வெளிப்படுத்திக் கொண்டதாக முடியுமேயன்றி மன்னர் பெருமானது பெருமையை வெளிப்படுத்தியதாகாது. ஆனாலும், தோன்றியதைச் சொல்ல ஆசைப்படுகிறேன்."

இந்த முன்னுரையைக் கேட்ட புலவர்கள், 'காரிகிழார் எதற்காக இந்த அவையடக்கம் கூறவேண்டும்?' என்று நினைத்தார்கள். காரிகிழார் பேசலானார்.

"பல பெரிய மன்னர்களை இப் பாண்டிய மன்னர் வென்றாரென்பதுஉண்மைதான். வேறு யாருடைய குடையின் கீழும் இந்நாட்டார் வாழாதபடி தம் ஒரு குடையை விரித்து உலகைப் புரக்கிறார் இப் பெருவழுதியார். இவருடைய குடை விரிய மற்றவர்களுடைய குடைகளெல்லாம் மடங்கின என்று சொல்லிப் பாராட்டுகிறோம். ஆனால் இவர் குடையும் மடங்கும் குடை என்று யாரேனும் சொல்வார்களா?"

"சொல்லமாட்டார்கள், சொல்லமாட்டார்கள்" என்று மெல்லிய குரலில் அங்குள்ளவர்கள் சொல்லுவது காரிகிழார் காதில் விழுந்தது.

"இவர் குடையும் மடங்கும் என்று நான் சொல்லு கிறேன்."

"ஹா!" என்று திடுக்கிட்டனர் பலர். 'இதென்ன அநுசிதமான வார்த்தையைப் பேசுகிறார் புலவர்' என்று எண்ணினர் சிலர். புலவர் கூட்டத்தில் எல்லோரும் காரிகிழார் மேலே என்ன சொல்லப் போகிறார் என்று ஆவலோடு நோக்கினர்.

'இவர் குடை மடங்குவது கிடக்கட்டும். எட்டுத்திக் கிலும் உள்ள மன்னர்களை வென்று அவர்கள் முடி தம் அடிவருட நின்ற பிரான் என்று நம் அரசரைக் கொண் டாடுகிறோம். வணங்கா முடியுடைய வழுதி என்று சொல்லுகிறோம். இவர் வணங்கும் முடியை உடையவரே என்று நான் சொல்லுகிறேன்; தைரியத்தோடு சொல்லு கிறேன்."

சபையில் உள்ளவர்கள் தம் காதுகளையே நம்ப முடிய வில்லை. 'சாமானியமான குறுநில மன்னர்களெல்லாம் வணங்காமுடித் தம்பிரான் என்று பட்டம் பெற்றிருக் கிறார்கள். உண்மையிலே வணங்காமுடி பெற்ற வழுதியை வணங்கிய முடியினருகச் சொல்வது பிழை; பாவம் என்றே சொல்லவேண்டும். அப்படியிருக்க, காரிகிழார் என்ன காரணத்தால் இப்படியெல்லாம் பேசுகிறார்? அரச வையில் சமயமறிந்து பேசத் தெரியாதவர் அல்லவே இவர்!'— அவர்கள் சிந்தனை எப்படியெல்லாமோ ஓடியது.

காரிகிழார் அதோடு நிற்கவில்லை. "இம் மன்னர் பிரானது கண்ணி விளக்கம் பெறுவதாக என்று வாழ்த்துகிறார்கள் புலவர்கள். நான் அது வாடட்டும் என்று வாழ்த்துகிறேன்."

இடியோசை கேட்டதுபோல இருந்தது சிலருக்கு. 'என்ன அமங்கல வார்த்தை!' என்று செவிபுதைத்தனர் சிலர். அரசன் ஒன்றுமே விளங்காமல் உட்கார்ந்திருந்தான். அமைச்சர் கண்கள் சிவந்தன.

"பெருவழுதியின் சினம் தாங்குவதற்கரியது என்று பேசுகிறோம். அது பகைவரைக் கருவறுப்பது, என்றும் தணியாதது என்று பாராட்டுகிறோம். அந்தச் சினம் மேற் செல்லமாட்டாமல் அடங்கட்டுமென்று நான் சொல்லுகிறேன்."

ஒரு பெரியவருக்கு ஆத்திரம் தாங்க முடியவில்லை. "காரிகிழாரா இப்படியெல்லாம் பேசுகிறவர்? இந்த வார்த்தைகளைக் கேட்ட செவிகளைக் கங்கை நீரால் கழுவினாலும் தீராது. சொன்ன நாவைப்பற்றி என்ன சொல்வது?" என்று பொருமினார்.

காரிகிழார் அஞ்சவில்லை. நடுங்கவில்லை. புன்னகை பூத்தார். அந்தப் பெரியவரைப் பார்த்தார். "உங்கள் கோபம் நியாயந்தான். ஆனால் நான் இன்னும் முழுமையும் சொல்லவில்லையே! அதற்குள் உங்கள் கருத்தைத் தெரிவித்து விட்டீர்களே!" என்றார்.

"இன்னும் வேறு இருக்கிறதா?" என்று அந்தப் பெரியவர் கோபத்தோடு கேட்டார்.

"பொறுங்கள்; சற்றுப் பொறுங்கள். மடங்காத குடை மடங்குக என்று பின்னும் வாழ்த்துகிறேன்.

இகழவில்லை; வாழ்த்துகிறேன். வணங்கா முடி வணங்குக என்று வாழ்த்துகிறேன். வாடாத மாலை வாடுக என்று பரவுகிறேன். அடங்காத கோபம் அடங்குக என்று வாழ்த்துகிறேன்'' என்று அவர் சொல்லும்போது யாவரும் பெரிய குழப்பத்தை அடைந்தனர். புலவர்கள் மாத்திரம், "ஏதோ அற்புதம் விளக்கப் போகிறார் இவர்" என்று உறுதியாக நம்பினர். அவர்களிற் சிலர், "புலவர் பெருமான் இனியும் அவையினரை மயக்கத்தில் ஆழ்த்தவேண்டாம். தெளிய வைக்கவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டனர்.

4

காரிகிழார் ஒரு முறை சுற்றிலும் பார்த்தார். எல்லோரும் அவரையே பார்த்துக்கொண்டிருந்தனர். மன்னன் ஆவலை வெளிப்படையாகக் காட்டவில்லையே ஒழிய, எல்லோரையும்விட அதிக வேகம் அவனுக்குத்தான் இருந்தது. புலவர் பேசத் தொடங்கினர்.

"எல்லோருக்கும் படபடப்பை உண்டாக்கிவிட்ட என் செயலைப் பொறுத்தருள வேண்டும். நான் சொன்னவையெல்லாம் மன்னர்பிரானுடைய சீரிய குணங்களைப் புலப்படுத்துவனவே யன்றி வேறல்ல. எம்பெருமானுடைய சிவ பக்தியை நீங்கள் நன்கு அறிவீர்கள். திருக்கோயிலை வலம் செய்யும் வழக்கமுடைய பெருவழுதி அங்கே குடைபிடித்துக்கொண்டா செல்கிறார்? அவருடைய பக்திக்கு இழுக்கல்லவா அது? முக்கட்செல்வர் திருக்கோயிலில் இவர் குடை பணிகிறதை நாம் பார்ப்பதில்லையா? அங்கே மடங்கும் குடை எங்கும் நிமிர்ந்து நிற்கிறது. ஆகவே, முக்கட் செல்வர் நகர் வலஞ்செயற்கு

நின் குடை பணிக என்று நான் வாழ்த்துவதில் ஏதாவது தவறு உண்டா? சொல்லுங்கள்.''

சபையினர் ஆனந்தத்தால் ஆரவாரம் செய்தார்கள். "காரிகிழாரா தவறு செய்பவர்?" என்று பேசிக்கொண்டார்கள்.

''வேள்வி பலவற்றைச் செய்யும் அந்தணரிடம் இப் பெருமானுக்கு உள்ள மதிப்பை நாம் அறிவோம். பிற இடங்களில் வணங்காத இப் பிரான் முடி, நான் மறை முனிவர் ஆசிகூறி ஏந்திய கைக்கு எதிரே இறைஞ்சுக என்று வாழ்த்துவது தவறாகுமா? அந்த வணக்கந்தானே பல் யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியென்ற சிறப்பை நம் மன்னர்பிரான் பெறும்படியாக வைத்தது?''

''புலவர் சாமர்த்தியமே சாமர்த்தியம்!'' என்று அமைச்சர் ஒருவர் சொல்லிக்கொண்டார்.

''நம் மன்னர் மாலை வாடட்டும் என்றேன். எப்போது என்று நீங்கள் யோசிக்கவில்லை. பகை மன்னருடைய நாடுகளைச் சூறையாடிச் சுடும்போது அந்தப் புகை வீசுவதனால் அது வாடட்டும் என்கிறேன். வேண்டாம் என்று சொல்ல உங்களுக்குத் தைரியம் உண்டா?''

புலவரைக் குறை கூறிய பெரியவர் அயர்ந்து போய் விட்டார். ''தைரியம் இல்லை, தைரியம் இல்லை, தைரியம் இல்லை. உம்முடைய புலமைத் திறத்துக்கு முன் நாங்கள் எல்லாம் எம்மாத்திரம்?'' என்று படபடப்புடன் சொன்னார் அவர்.

''நம் மன்னர் மன்னாது வெகுளி அடங்கட்டும் என்றேன். இவருடைய கோபம் எங்கேயும் செல்லும். ஓரிடத்தில் மாத்திரம் செல்லாது. வாலிழை மட மங்கையர்

கோபிக்கும் போது இவரும் சினந்து பயன் இல்லை. அவர் முகத்திலே சிவப்பேறினுல் இவர் கோபம் ஓடி ஒளிந்து கொள்ள வேண்டும். இதுதான் இன்ப இயல்; காதல் வாழ்வு. இது நம் மன்னரிடம் வாய்ப்பதாக என்று வாழ்த்துகிறேன். நீங்களும் சேர்ந்து வாழ்த்துங்கள்" என்று கூறி முடித்தார் புலவர்.

எல்லோரும் மகிழ்ச்சியினுல் ஆரவாரித்தனர். கடைசியில் புலவர் இன்ப இயலைக் கூறியபோது மன்னன் உள்ளம் குளிர்ந்தான். காரிகிழார் தம் சாமர்த்தியத்தால் சபையை முதலில் ஒரு கலக்குக் கலக்கினவர், பிறகு தெளிய வைத்துவிட்டார். வியப்பும் ஆனந்தமும் துளும்ப அந்தத் தெளிவு ஏற்பட்டது.

[புறநானூறு, 6-ஆம் பாடலை ஆதாரமாகக் கொண்டு எழுதியது.]

# போரும் நீரும்

இளமைக் காலத்திலே பட்டத்தைப் பெற்றவன் பாண்டியன் நெடுஞ்செழியன். சூழ இருந்த சிற்றரசர்களும் பேரரசர்களும் பாண்டி நாட்டின்மேல் எப்போதும் ஒரு கண் வைத்திருந்தார்கள். ஐந்து வகையான நிலங்களும் விரவியுள்ள நாடு அது. தமிழுக்குச் சிறந்த பிரதேசம். செந்தமிழ் நாடு என்ற சிறப்புப் பெயரைப் பெற்றதல்லவா பாண்டி நாடு?

நெடுஞ்செழியனை இளம் பிள்ளையென்று எண்ணிய பகைவர்கள் அவனோடு பொருது வென்றுவிடலாம் என்று எண்ணினார்கள். முக்கியமாக யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை என்ற சேர அரசனுக்குத்தான் இந்த எண்ணம் அதிகமாக இருந்தது. "இப்போதுதான் இவன் பட்டத்துக்கு வந்திருக்கிறான். சின்னஞ் சிறுவன்; இவனுக்கு அடங்கி நடக்கும் அமைச்சரோ படைத் தலைவரோ அதிகமாக இருக்க மாட்டார்கள். நாம் சில மன்னர்களையும் துணையாகக் கொண்டு போருக்கு எழுந்தால் மிக எளிதில் வெற்றி பெறலாம்" என்றெல்லாம் அவன் மனக் கோட்டை கட்டினான். தன் கருத்தை மெல்லப் பரவவிட்டான். "இவ்வளவு பெரிய அரசன் போருக்குப் புறப்பட்டால் வெற்றி கிடைப்பதற்கு என்ன தடை? நாம் இவனுடன் சேர்வதால் இவனுக்குத் துணைவலி மிகுதியாகும் என்பதைக் காட்டிலும், கிடைக்கும் வெற்றியில் நமக்கும் பங்கு கிடைக்கும் என்பதுதான் உண்மை. தக்க சந்தர்ப்பத்தை நழுவ விடக்கூடாது" என்று எண்ணிய வேற்று அரசர் சிலர் அவனுடைய கருத்தைப் பாராட்டி

னார்கள்; தாங்களும் அவனுடன் போருக்கு எழுவதாக உறுதி மொழியும் கூறினார்கள்.

படைகள் சேர்த்தார்கள். போருக்கும் எழுந்தனர். நெடுஞ்செழியன் இளையவன்தான். ஆனாலும் வீரத்திற் சிறந்த பேரரசர் பரம்பரையிலே தோன்றியவன். குட்டி யானாலும் பாம்பு பாம்புதானே?

பகையரசர் கூடிப் பொர வருவதைக் கேள்வியுற்று அவன் சீறினான். "ஓஹோ! இவர்கள் என்னை இளம் பிராயத்தை உடையவனென்று எண்ணி விட்டார்களோ? இவர்களை அடியோடு ஒழித்துவிடாமல் வேறு காரியம் பார்ப்பதில்லை" என்று உறுதி பூண்டான்.

ஒற்றன் ஒருவன் வந்தான்; "அரசே, சேர நாட்டிலும் மற்ற இடங்களிலும் இந்த நாட்டுப் பெருமை தெரியாமல் பலர் பிதற்றிக்கொண்டிருக்கிறார்கள். 'இந்த அரசனுடைய நாட்டின் பெருமையைப் பெரிதாக உயர்த்திக் கூறுபவர்களைப் பார்த்தால் சிரிப்புத்தான் வருகிறது. அதைக் கண்டு நாம் ஏமாந்து போகமாட்டோம். சின்னஞ் சிறு பிள்ளையாகிய அரசனுக்கு என்ன தெரியப் போகிறது?' என்று பேசிக்கொள்கிறார்கள்" என்றான்.

அரசன் சற்று மனம் உளைந்தான். "அவர்களுடைய படைகள் எத்தகையவை?" என்று ஒற்றனைக் கேட்டான்.

"யானை, தேர், குதிரை, வீரர் என்னும் நால்வகைப் படைகளையும் தொகுத்துக் கொண்டிருக்கிறார்கள். சேர நாட்டு யானைகளை நானே பார்த்தேன்" என்றான் ஒற்றன்.

"இருக்கட்டும்; அதனால் என்ன? மணி ஒலிக்கும் பெரிய யானைகளும் தேரும் குதிரையும் படைகளையுடைய

மற்றவர்களும் இருக்கிறார்களென்று அவர்களுக்குச் செருக்கு உண்டாகியிருக்கிறது. பகையுணர்ச்சி மூண்ட உள்ளத்தில் நிதானம் இராது. என்னுடைய படைப் பலத்தை அவர்கள் கருதவில்லை. அதனை நினைந்து அஞ் சாமல் சினம் மிகுந்து சின்னத் தனமான வார்த்தை களைச் சொல்லித் திரிகிறார்கள். கிடக்கட்டும். அதற்குப் பதில் சொல்லிக்கொண்டிருப்பதில் பயன் இல்லை."

அரசன் யோசனையில் ஆழ்ந்தான். படைத் தலைவ ரையும், மந்திரிமாரையும் வருவித்தான். ஆலோசனை செய்தான். "போர் செய்ய ஆயத்தமாயிருக்க வேண்டும். நம்முடைய நாட்டின் எல்லைக்குள்ளே அவர்கள் வருவ தற்கு முன் நாம் எதிர்சென்று போராட வேண்டும்" என்று நெடுஞ்செழியன் வீரம் ததும்பக் கூறினான். படைத் தலைவர் உடம்பட்டார். மந்திரிமார் பின்னும் யோசனை செய்தனர்.

"இனி யோசனைக்கு நேரம் இல்லை. சிறு சொல் சொல்லிய வேந்தரைச் சிதையும்படி அருஞ்சமத்தில் தாக்கி அவர்களை அவர்களுடைய முரசத்தோடு ஒருங்கே சிறைப்படுத்துவதாக உறுதி கொண்டு விட்டேன். அப் படிச் செய்யாவிட்டால் இதோ ஆணை யிடுகிறேன். கேளுங்கள். அவர்களைச் சிறை செய்யாவிட்டால், என் னுடைய குடை நிழலில் வாழ்பவர் யாவரும் புகலிடம் காணாமல் வருந்தி, எம் அரசன் கொடுங்கோலன் என்று கண்ணீருடன் நின்று பழிதூற்றும் பாவி ஆகக் கடவேன்!"

அரசன் முகம் சிவந்தது. அவனுடைய இளமை யழகிலே இப்போது வீரமுறுக்குத் தெளிவாகத் தெரிந் தது. மந்திரிமார் வியப்புடன் அவனை உற்று நோக்கினர்.

'பரம்பரைக்கு ஏற்ற வீரம்!' என்ற நினைவுதான் அவர்கள் உள்ளத்தில் தோன்றியது.

"இந்தப் பாண்டியநாடு தமிழ் வளர்ந்த இடம். பாண்டிய அரசர் புலவரைப் போற்றித் தமிழை வளர்த்தார்கள். மிகச் சிறப்புற்ற புலவர்கள் இந்த நாட்டையும் எங்கள் மரபினரையும் புகழ்ந்து பாடியிருக்கிறார்கள். நான் போர் செய்ய அஞ்சினேனானால் அந்தப் புகழ் என்னாவது? பகைவரை வெல்லாமற் போவேனானால் ஓங்கிய சிறப்பும் உயர்ந்த கேள்வியும் உடைய மாங்குடி மருதனார் முதலிய புகழ்பெற்ற புலவர் என் நாட்டைப் பாடாமல் ஒதுக்கும் நிலை வருவதாகுக! என்னுடைய குடிமக்களும், சுற்றத்தாரும் துன்புற்று வாட, என்னிடம் வந்து இரப்பவர்களுக்குக் கொடுக்க முடியாத வறுமை என்னை வந்து அடையட்டும்! இந்த வஞ்சினத்தைப் பாண்டிய அரசர் வழி வந்தவன் என்ற உணர்ச்சியோடு நான் சொல்லுகிறேன்."

அரசன் வஞ்சினங் கூறும்போது சிங்கம் முழங்குவதுபோல இருந்தது. உடன் இருந்தோர் அஞ்சி நடுங்கினர். அரசன் தோள் துடித்தது; கண்கள் சிவந்தன; வார்த்தை ஒவ்வொன்றும் அழுத்தமாக வந்தது. "இனி இந்த உலகமே எதிர் நின்றாலும் போரை நிறுத்த முடியாது" என்று மந்திரிமார் உணர்ந்து கொண்டனர்.

போருக்கு வேண்டியவற்றை யெல்லாம் செய்யலாயினர்.

## 2

**போர்** மூண்டுவிட்டது. அரசனே நேரில் சென்று போரிடத் தொடங்கினான். "இத்தனை சிறு பிள்ளை போர்க்

களத்துக்குப் போயிருக்கிறானே!'' என்று அச்சமும் வியப்பும் கொண்டனர் மக்கள்.

''நேற்று வரையில் கிண்கிணி கட்டியிருந்த இளங் கால் அது; இன்று போர் வந்ததென்று வீரக்கழலைக் கட்டிக்கொண்டான். முதல் முறையாகக் குடுமி களைந்த விழா சில நாட்களுக்கு முன்தான் நடந்தது. அந்தத் தலையில் குலத்துக்குரிய அடையாளமாகிய வேம்பையும் போர்ப் பூவாகிய உழிஞையையும் அணிந்துகொண்டான். சிறு வளைகளை அணிந்திருந்த கை, இப்போது வில்லைப் பற்றிக்கொண்டது. சிங்கக்குட்டி தாவுவது போலத் தேரில் ஏறி நிற்கிறானே; இப்படியும் வீரத் திருக்குழந்தை உலகத்தில் உண்டா? அவன் மாலை வாழட்டும்! அவன் பெருமைவாழட்டும்!'' என்று புலவர்கள் வாழ்த்தினார்கள்.

போரில் பகைவராக வந்தவர் ஒருவர் இருவர் அல்லர். சேரனும் சோழனும் அவர்களுடன் ஐந்து சிற்ற ரசர்களும் சேர்ந்துகொண்டனர். தலையாலங் கானம் என்ற இடத்தில் போர் மிகக் கடுமையாக நடந்தது. இரண்டு பக்கத்திலும் படைப் பலம் மிகுதியாகவே இருந்தது.

இடைக்குன்றூர் கிழார் என்ற புலவர் இதைக் கேள்வியுற்றார். தலையாலங்கானத்துக்குச் சென்று பார்த்துவந்தார். பாண்டிய மன்னனுடைய வீரத்தை எண்ணி அவர் பிரமித்துப் போனார். ''இந்த உலகத்தில் எத்தனையோ போர்கள் நடந்திருக்கின்றன. அவற்றைப் பற்றிக் கேட்டிருக்கிறோம். ஒரு மன்னனை மற்றொரு மன்னன் எதிர்த்துப் போர் செய்தலும் அதில் ஒருவன் தோல்வியுறுதலும் உலக இயற்கை. ஆனால் இந்த மாதிரி நாம் கேட்டதே யில்லை. நெடுஞ்செழியனுடைய

பெருமையையும் பலத்தையும் அறியாத எழுபேர் கூடிக் கொண்டு அவனை எதிர்க்கிறார்கள். அவனோ சலியாமல் முரசு முழங்க மேற்சென்று அடுகின்றான். இதைக் கதையிலும் கேட்டதில்லையே!'' என்று வியந்து பாடினார்.

போர் நாளுக்கு நாள் மிகுதியாயிற்று. சிற்றரசர்களுக்குப் போரில் எதிர்த்து நிற்கும் ஆற்றல் இல்லை. சிலர் போரில் இறந்தனர். சிலர் பின் வாங்கினர். கடைசியில் யாரும் கைவிடவே, சேர மன்னன் பலமிழந்து சிறைப்பட்டான். நெடுஞ்செழியன் செய்த கன்னிப் போரில் இத்தகைய வெற்றி கிடைத்ததைக் குறித்துப் பாண்டிய நாடே குதூகலித்தது.

இளமையில் போரில் ஈடுபட்டு விட்டமையால் அரசனுக்கு மேலும் மேலும் போரைப் பற்றிய சிந்தனை மிகுதியாயிற்று. படைகளைத் திரட்டிக்கொண்டே இருந்தான்.

## 3

அரசன் தன் பருவத்துக்கு மிஞ்சிய வெற்றி மிடுக்கினால் பூரித்திருந்தான். பெரும்போர் நிகழ்ந்ததால் நாட்டின் விளை பொருளுக்கு அதிகச் செலவு ஏற்பட்டது. போர் நின்றவுடன் நாட்டு வளம் பெருகும் துறையில் அரசன் கவனம் செலுத்தவில்லை. அரியணை ஏறியவுடன் வில்லைப் பிடிக்க வேண்டி நேர்ந்தமையால் நாட்டைப் பற்றி அப்போது சிந்திக்க இயலவில்லை. போருக்குப்பின் அதில் கிடைத்த வெற்றியிலே மயங்கியிருந்தமையால் பின்பும் அதைப் பற்றிய நினைவு எழவில்லை.

ஏரிகளும், குளங்களும் மேடிட்டிருந்தன; கரைகள் உடைந்து பயனில்லாமல் கிடந்தன சில. நீர் வளம் இல்லா

மையால் நிலவளம் குறைந்தது. விளைவு குறைந்தது. பஞ்சம் வந்துவிடுமே என்ற அச்சம் பாண்டி நாட்டு மக்களுள்ளத்தே எழுந்தது.

அரசன் படை சேர்ப்பதை விட்டு, வீர விளையாட்டை நிறுத்தி, நாட்டின் நிலையை உணர்ந்து வளம்படுத்த வேண்டும் என்று சொல்வார் யாரும் இல்லை. மந்திரிமார் சொல்ல அஞ்சினர். இளம் பருவம் உடையவனானாலும் கோபத்திலும் வீரத்திலும் மிகமிக ஓங்கி நிற்பவன் என்பதை அவர்கள் தம் கண்முன்னே பார்த்தவர்கள்.

இந்த நிலை நீடித்தால் பாண்டிநாட்டில் நிச்சயமாகப் பஞ்சம் வந்துவிடும் என்பதை அறிந்தனர் மந்திரிமார். அரசனுக்கு யோசனை கூறவோ அஞ்சினர். என்ன செய்வது என்று ஏங்கி நின்ற தறுவாயில் சமயசஞ்சீவிபோல ஒரு புலவர் வந்தார். குடபுலவியனார் என்பது அவர் பெயர். தமிழ்ப் புலவர்கள் பொதுவாகவே யாருக்கும் அஞ்சாதவர்கள்; நியாயத்தையே எடுத்துரைப்பவர்கள். அவருள்ளும் குடபுலவியனார் நயமாக எடுத்துரைக்கும் ஆற்றல் பெற்றவர். அவரிடம் அமைச்சர்கள் தம் கருத்தைக் கூறி, "எப்படியேனும் நீங்கள் மனம் வைத்து அரசரை வழிக்குக் கொண்டுவரவேண்டும்" என்று வேண்டிக்கொண்டார்கள். "என்னால் இயன்றதைச் செய்வேன்" என்று அவர் உடம்பட்டார்.

4

"தலையாலங்கானத்துச் செருவைப்பற்றி இன்று உலகத்தில் பாராட்டாத புலவர்களே இல்லை" என்றார் குடபுலவியனார்.

"ஆம். பெரிய போர்தான். நான் பட்டத்துக்கு வந்தவுடன் முதல் வேலை இந்தப் போரில் வெற்றிபெறுவதாகி விட்டது" என்முன் நெடுஞ்செழியன்.

"எல்லாம் உங்கள் குலத்தின் பெருமை. நாவலந்தீவு முழுவதும் ஒரு குடைக்கீழ் ஆண்ட உரவோர் பாண்டிய மன்னர். அவர்களுடைய மரபில் வந்த அரசர்பிரான் கோடி கோடி ஆண்டுகள் வாழவேண்டும்."

"அவர்கள் பெருமையே பெருமை! பாண்டிநாட்டின் பெருமை வேறு எந்த நாட்டுக்கு இருக்கிறது? மதுரை மாநகரின் சிறப்பை வேறு எங்கே பார்க்க முடியும்? பகையரசர் என்னதான் முயன்ருலும் இந்த நகருக்குள்ளே புக முடியுமா?"

"ஆழமான அகழியையும் உயரமான மதில்களையும் பெரியோர்கள் அமைத்திருக்கிருர்கள். இத்தகைய வளம் பெற்ற பழைய நகரம் வேறு எங்கும் இல்லை என்பது உண்மை. இந்த நகரில் வாழ்ந்த அரசர்களெல்லாம்இம்மை மறுமைப் பயன்களைக் குறைவின்றிப் பெற்றவர்கள்; வீரத்திலே சிறந்தவர்கள். அதனுல் புகழைப் பெற்றவர்கள்."

"அவர்கள் சென்ற நெறியிலே நானும் செல்லவேண்டுமென்று ஆசைப்படுகிறேன்."

"அப்படியே ஆகட்டும். புண்ணியமும் வெற்றியும் புகழும் ஒருங்கே கிடைப்பதற்கு மூல காரணம் ஒன்று உண்டு. அதனை உடையவர்கள் மறுமையுலகத்துச் செல்வமும், அரசரை வென்று நிற்கும் திறனும் நல்லிசையும் பெறுவார்கள்."

"படைப்பலத்தையா சொல்கிறீர்கள்?"

"அல்ல, அல்ல. யானை முதலிய படைகள் அல்ல; வேறொரு படை: உழுபடை. படைகளுக்கெல்லாம் உண வளிக்காவிட்டால் அவை போரிட முடியுமா? உடம்பிலே உயிர் தங்கியிருக்கும்படி செய்தாலல்லவா போரிட முடியும்?"

"நான் படை வீரர்களுக்கு வேண்டிய உணவைக் கொடுத்தேன். அவர்களுக்கு இனியும் குறைவின்றிக் கொடுக்கக் கட்டளை பிறப்பித்திருக்கிறேன்."

"நல்ல காரியந்தான். உண்டி கொடுத்தவரே உயிர் கொடுத்தவ ராகிறார்கள். உணவு இல்லாவிட்டால் உடலும் இல்லை. ஆனால் அந்த உணவு எப்படி வருகிறது? அது தானே கிடைத்துவிடாது. நிலமும் நீரும் சேர்ந்தால் உணவு கிடைக்கும்; உணவுப் பொருள் விளையும். அந்த இரண்டையும் சேர்ப்பவர்களே உடம்பையும் உயிரையும் படைத்தவர்களாகிறார்கள்."

"நம்முடைய நாட்டில் விளை நிலத்துக்குக் குறை வில்லையே?"

"உண்மைதான். ஆனாலும் நிலம் மாத்திரம் இருந்தால் போதுமா? எவ்வளவுதான் பரந்த நிலங்கள் இருந்தாலும், விதைத்துவிட்டு வானத்தைப்பார்க்கும்படியாக இருந்தால் அந்த நிலங்களால் உடையவனுக்கு என்ன பயன்? அரசே, சற்றுக் கவனிக்கவேண்டும். படை இருக்கலாம்; ஆனால் அதற்கு என்றும் கொடுத்துவர உணவு வேண்டும். நிலம் இருக்கலாம்; ஆனால் அதை விளையும்படிச் செய்ய நீர் வேண்டும். வானத்திலே நீர் இருக்கிறதென்று நம்பியிருந் தால் நமக்கு வேண்டியபொழுது அது வழங்காது. அது வழங்கும்போது நாம் சேமித்து வைக்கவேண்டும். நிலம்

பள்ளமாகக் குழிந்திருக்கும் இடங்களில் வேண்டிய கரை கட்டியும், ஏரி குளங்களைக் கரை திருத்தியும் பாதுகாக்க வேண்டும். அப்படி நீரைத் தடுத்தால் நாடு வளம் பெறும். நீரைத் தேக்கினவர் யாரோ அவரே புகழையும் தேக்கு வார்.''

அரசன் சிந்தனையில் ஆழ்ந்தான். ஏரி குளங்களைச் சீர்திருத்தவேண்டும் என்று எப்பொழுதோ யாரோ சொல்லிக் காதில் விழுந்ததாக நினைவு வந்தது. அமைச்சர் சொன்னதைத்தான் பராமுகமாகக் கேட்டிருந்தான். இப் போது அதையே அழுத்தந் திருத்தமாகப் புலவர் சொன் ஞர். படிப்படியாகச் சொன்ஞர். அவன் மனத்தில் அது உறைத்தது.

"உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர். நீரையும் நிலத்தையும் சேர்த்தவர்களால்தான் உடம்பையும் உயிரை யும் சேர்த்துவைக்கமுடியும். வானம் நம்முடைய விருப்பப் படி பெய்யாது. நீரைத் தேக்கினவர்களே புகழைத் தேக்கு வார்.'' இந்தப் பொன்ஞன வாக்கியங்கள் ஒவ்வொன்ருக அவன் உள்ளத்தில் கணீர் கணீர் என்று மணியடிப்பது போல் மீட்டும் ஒலித்தன.

"புலவர் பெருமானே, நானும் நீரைத் தேக்கிப் புகழைத்தேக்க முயல்வேன்'' என்ற வார்த்தைகள் அரசன் வாயிலிருந்து வந்தபோது அங்கிருந்த அமைச்சர்களின் முகங்கள் என்றும் இல்லாத மலர்ச்சியைப் பெற்றன.

# தாயின் பிரார்த்தனை

இல்லறவாழ்க்கையில் ஈடுபட்ட அவன் மனித இயல்புடையவன்தானே? மனிதர்களுக்குள்ள குறைபாடுகளும் அவனுக்கு உண்டு. கட்டிளங் காளை; செல்வத்தாலும் பிற பொருள்களாலும் குறைவற்றவன். எல்லாவற்றுக்கும் மேலாக அவனுக்கு அன்பே உருவாகிய காதலி கிடைத்திருக்கிறாள். வேறு என்னவேண்டும்?

இவ்வளவு வளம் இருந்தும், நித்தம் பாலுணவை உண்பவன் ஒருவன் இடையிலே சிறிது காடியை விரும்பினது போலாயிற்று அச்செயல். அவனுக்கு ஒரு கூட்டாளி வேறு சேர்ந்துகொண்டான். பாட்டினாலே அவனை மயக்கிய பாணன் மெல்ல மெல்ல அவனுடைய உள்ளத்தைக் கவர்ந்தான். "வீணையின் இன்னிசையிலே உருகி நிற்கும் உங்கள் கலையுணர் திறனை நான் போற்றுகிறேன். உயிரில்லாத இந்த யாழின் இசையே இவ்வளவு இனிமையாயின், இன்னும் உயிர்பெற்ற யாழின் இசை எப்படி இருக்கவேண்டும்!" என்று பாணன் ஒரு புதிய செய்தியை எடுத்துவிட்டான்.

"அது என்ன? உயிருள்ள யாழா? அப்படியும் ஒன்று உண்டா?"

"ஆம்; உண்டு. கடவுள்படைத்த அந்த யாழ் கண்ணைக் கவரும்; காதைக் கவரும்; கருத்தையும் கவரும். அதன் பேரழகைப் பார்த்துக் கொண்டிருந்தாலே போதும். அதன் இசையைக் கேட்கத் தொடங்கினால் பிறகு அதனின்றும் மீள்வதென்பது தேவர்க்கும் அரிய செயல்.

இசையோடு போருமா? அது பாடும்; ஆடும்; ஐம்புலன் களுக்கும் இன்பம் தரும்."

பாணனுடைய வருணனை இல்லத் தலைவனுடைய ஆர்வத் தீயை விறகிட்டும் நெய்யிட்டும் மூட்டியது. மெல்ல மெல்லப் பாணன் தலைவனைப் பரத்தையர் சேரிக்கு அழைத்துச் சென்றான். முதலில் இசை நயம் காமுற்றுத் தான் சென்றான் அவ்வாடவன்; ஒரு பரத்தையின் இசையிலே ஈடுபட்டான். அப்பால் அவளுடைய ஆடல் அவனை ஆட்கொண்டது. இறுதியில் அவளுடைய அழகைக் கண்டு மயங்கினான். படிப்படியாகத் தலைவன் தன் மனவலியை இழந்தான். அவன் தன் வீட்டிலே இருந்தால் தன் நிறையை இழந்திருக்கமாட்டான். விரகெலாம் அறிந்த பாணன் இசை ஆவலை அவன்பால் எழுப்பிப் பரத்தையர் சேரிக்கே அவனை அழைத்துச்சென்றுவிட்டான். அதற்கு மேல் அவளுடைய சாமர்த்தியம் பலிக்கத் தொடங்கியது. இசையும் கூத்தும் அழகும் பேச்சும் மனவலி படைத்த தலைவனைக் காமச் சுழலுக்குள் இழுத்துச் சென்று ஆழ்த்தி விட்டன.

## 2

இங்கே மனைத்தலைவி எப்போதும்போல் இல்லற ஒழுக்கங்களை முறைப்படி செய்துவந்தாள். கணவன் பரத்தையர் வலையிலே சிக்கினானென்பது அவளுக்குத் தெரியும். கற்புக்கு அருங்கலமாகிய அவள் அதனால் சிறிதும் மனவேறுபாடு அடையவில்லை. அவனிடத்தில் வைத்த காதல் தளரவில்லை; அது பின்னும் இறுகியது. நமக்கெனவே வாய்த்தவனாகிய அவன் எங்கே சென்றாலும் இங்கே வருவான் என்ற மனத் துணிவோடு அவள் இருந்தாள். அந்தத் துணிவு இல்லாவிட்டால் அவள் ஒரு கணம் அமைதியாக

வீட்டுக் கடமைகளைச் செய்ய முடியுமா? கணவனும் மனைவியும் ஒன்றுபட்டு நடத்தும் இல்லற வாழ்க்கையில் புறத்தே சென்று வேளாண்மையோ கைத்தொழிலோ வியாபாரமோ ஏதாயினும் செய்து பொருள் கொணர வேண்டியவன் கணவன். அறவழியில் அவன் ஈட்டிக் கொணர்ந்த அதனைப் பாதுகாத்து அளவறிந்து, தகுதி யறிந்து, வாழ்க்கை நிலையறிந்து செலவிட்டு அறத்தையும் இன்பத்தையும் வளர்ப்பவள் மனைவி. அவள் மனையரசி. அரசிக்கு ஏவலனாக இருப்பவன் கணவன். அவன் உள்ளம் திறம்பினால் மனை இருள் படரும். இல்லறம் சீர்குலையும்.

தமிழ் மகளாகிய தலைவி இந்தப் பண்புகளிலே தலை சிறந்தவள். தன் கணவன் நெறி பிறழ்ந்து ஒழுகுவதை உணர்ந்தும் அவள் பின்னும் ஊக்கத்தோடு இல்லற வாழ் விலே ஈடுபட்டாள். விருந்தினர்களுக்கு வேண்டிய உப சாரங்களைச் செய்தும், இரவலர்களுக்கு ஈந்தும் வழக்கம் போல் இல்லறச் செயல்களை நடத்தி வந்தாள். பொருள் ஈட்டும்பொருட்டு வீட்டுத் தலைவன் வெளியூருக்குச் சென்று சில மாதங்கள் தங்கினால் அப்போது இல்லறம் தடைபடாது நடத்துவது அவள் கடமை அல்லவா? அதே நிலையில் இப்பொழுதும் நடத்தி வந்தாள். அவன் வீட்டில் இல்லை என்ற குறையை வருவார் அறியாதபடி அறம் வளர்த்தாள்.

ஆனாலும் அவள் பெண்தானே? தன் உள்ளக்கோயி லில் வைத்துப் பூசிக்கும் தெய்வத்துக்கு அருகிருந்து தொண்டு புரியும் ஆசை எழாதா? ஊரார் அறியாமல் அவர்கள் இருவரும் பழகிவந்த காலம் அவளுக்கு நினை வுக்கு வந்தது. அப்போது களவொழுக்கத்திலே அள வளாவிய அவர்களுக்கு இடையிடையே ஒரு நாள் இரண்டு

நாள் பிரிந்து வாழ்வது துன்பமாக இருந்தது. அதனால் என்றும் பிரிவின்றி வாழவேண்டுமென்று எண்ணி உலகறிய மணம் புரிந்துகொண்டனர். அவர்கள் விருப்பம் நிறை வேறியது. நகமும் சதையும்போல ஒன்றி மனையறம் காத்து வந்தனர்.

இப்பொழுது அதற்கு இடையூறு வந்துவிட்டது. ஒன்றி வாழவேண்டிய நிலையில் பிரிவு வந்திருக்கிறது. பக லெல்லாம் அறத்தைச் செய்து பொழுதுபோயிற்று. இரவு வந்துவிட்டால் அவள் தானும் தனிமையுமாக இருந்தாள். அப்பொழுது அவனைப் பற்றிய நினைவு மிகுதியாயிற்று. உள்ளம் நெகிழ்ந்தது. காலையில் எழுந்தால் அவள் முகம் வாடியிருக்கும். அவளுடைய தோழியரும் பிறரும் அதைப் பார்த்துத் துணுக்குறுவார்கள். அவர்களுக்கு அதன் காரணம் நன்றாகத் தெரிந்ததுதானே? ஆகவே அவர்களும் மனம் உளைவார்கள். தலைவன் தவறு செய் வதை நினைத்து வருந்துவார்கள். எல்லா வகையிலும உத்தமியாகிய அந்தப் பெருமாட்டியின் மலரனைய உள்ளம் மறுகுவதை அவர்களால் பொறுக்கமுடியவில்லை. ஆகவே அந்த வருத்தந்தான் அவர்களுக்கு மேலோங்கி நினறது.

எழுந்தபொழுது வாடியிருந்த மனைத் தலைவியின் முகம் அடுத்த கணத்தில் மலர்ந்துவிடும். வழக்கம்போல் இல்லறச் செயல்களில் ஈடுபட்டு விடுவாள். இரவெல் லாம் பெண்மையின் குழைவும் பகலெல்லாம் கற்பின் திண்மையும் அவளிடத்திலே ஒளி வீசின. "என்ன ஆச்சரியம்! அவனுடைய பிழையை நினையாதவள் போலவே இருக்கிறாளே! இவளுடைய பொறுமை யாருக்கு வரும்? தனையே இந்த உருவம். இவள் உலகத்துப் பெண் களில் ஒருத்தி அல்ல; பொறுமையின் உருவாந் தெய்வம்;

அடித்தாலும் அணைத்தாலும் அன்பு செய்யும் தாய். இவளை நாங்கள் உடன்பிறந்த தோழியாக நினைப்பது தவறு. எவ்வளவு அறிவு பெற்றாலும் இத்தகைய பொறுமையும் மன வலியும் வருவது அரிது. இவள் பிராயத்தால் சிறியவளேனும் அறிவினால் முதியவள்; பெரியவள்; எமக்குத் தாய்; இல்லறத்தின் சிறப்பை உணர நிற்பார்க்கெல்லாம் தாய்!'' என்று தோழிமாரும் பிறரும் பேசிக் கொண்டனர்.

இற்பிறப்பு என்பது ஒன்றும், இரும்பொறை என்பது ஒன்றும், கற்பெனும் பெயரது ஒன்றும் அவள்பால் களிநடம் புரியக் கண்ட அவர்கள், அவ்வாறு எண்ணியது வியப்பன்று. தன்னையும் மறந்து, தன் தலைவன் பிழையைப் பிறர் அறியாதவாறு காத்து அறப்பெருஞ் செல்வியாக விளங்கினாள் அவள்.

## 3

தோழிமார் உள்ளம் வெந்து உருகியது. மனைத்தலைவி தன் துயரைப் புறத்தார் அறியாதபடி மறைத்தாள். தோழியருடன் கல கலப்பாகப் பேசுவதும், புன்னகை பூப்பதும், நல்லுரை கூறுவதுமாகவே இருந்தாள். மறந்தும் தலைவனைப் பற்றிப் பேசுவதில்லை. அவனை அவள் முன்னிலையிலே குறைகூற அவர்களுக்குத் தோன்றவில்லை. "இவள் உள்ளத்தில் எரிமலை குமுறிக்கொண்டிருக்கிறது. ஆனால், முகத்தில் அதன் சுவடு கூடத் தெரியவில்லை. என்ன காரணம்?'' என்று தம்மைத் தாமே கேட்டுக் கொண்டனர். உண்மை அது அன்று; தலைவி தலைவனுடைய பிழைக்காகச் சினம் கொள்ளவில்லை; அதைப் பெரிதாக எண்ணவும் இல்லை. தன் தனிமைக்காகத்தான்

அவன் வருந்தினான்; உலகமெல்லாம் துயிலில் ஆழ்ந்திருக்கும்பொழுது அவன் வருந்தினான்.

“கடவுளே, இதற்கு ஒரு பரிகாரம் இல்லையா!” என்று ஏங்கினார் தோழியர். அந்தப் பெண் தெய்வத்தோடு சார்ந்த சார்பினால் அவர்கள் உள்ளத்திலெழுந்த கோபம் மறைந்துவிட்டது. தலைவனுடைய செயலைக் குறித்து அவர்களுக்கு வெறுப்பும் சினமும் முதலில் உண்டாயின. இப்போது அவை மாறித் தலைவியின் இயல்பைக் கண்டு பெற்ற வியப்பே இடங்கொண்டது.

“இந்த உயர்ந்த தலைவனாகிய இவன் இத்தகைய செயலில் இறங்கினானே! ஆழந்தெரியாத மடுவைப்போல இருக்கிறது அவன் உள்ளம்” என்றாள் ஒரு தோழி.

“ஆம், நல்ல உவமை. அவனே அந்த மடுவைப் போன்றவன்தான்; ஆழம் அளவிடமுடியாத மடு. அதில் முதலை வாழ்கிறது. பலம் பொருந்திய ஆண் முதலை, முதலைப் போத்து, வாழ்கிறது. எவ்வளவு ஆழமாக இருக்கும்!”

“முதலை வாழ்கிறது என்றவுடன் எனக்கு நினைவு வருகிறது. அந்த முதலை முழுகுவாரைப் பிடித்து இழுத்துவிடும் என்கிறார்களே! யானையானாலும் அதன் வாய்க்குள் போக வேண்டியதுதான் என்று சொல்லுகிறார்களே! உண்மையா?”

“ஆம், உண்மைதான். யானையும் மனிதர்களும் வந்தால் இழுப்பது கிடக்கட்டும். அதைப் பெரிய கொடுமை என்று சொல்லமாட்டேன். அது தன்னுடன் ஒருங்கு வாழும் பெரிய மீன்களையெல்லாம் விழுங்கி விடும்.”

கேட்டவள், "அப்படியா! இந்த ஊர்த் தலைவன் இயல்புக்குச் சமமான இயல்பு அதற்கு இருக்கிறது போலும்! முதலைப் போத்து முழுமீன் ஆரும் தண்துறை ஊரன் இவன். அந்த முதலையைப்போல இவனும் தன்னுடன் பழகியவர்களுடைய உயிர் தேய ஒழுகுகிறான்" என்று சற்று வேகமாகச் சொன்னாள்.

மற்றொருத்தி உடனே பேச்சை நிறுத்தினாள். தலைவியின் இயல்புக்கு மாறாக அந்தப் பேச்சு ஓடிவிட்டதை அவள் உணர்ந்தாள். மேலே அந்தத் தோரணையில் பேச்சை வளர்க்க விரும்பவில்லை; "கடவுளை நாம் வேண்டிக்கொள்ள வேண்டும்; நம் தலைவிக்கு இன்பம் உண்டாகும்படி வாழ்த்த வேண்டும்" என்று தொடர்ந்து பேசினாள்.

"அவளுக்கு இன்பம் உண்டாகவேண்டுமானால் பழையபடி தலைவனும் தலைவியும் சேர்ந்து முறையாக அறம்புரிய வேண்டும். அவனோ அங்கு இருக்கிறான்; இவளோ இங்கிருக்கிறாள்."

"இருந்தால் என்ன? இங்கிருந்து போனவன் அவன் தான். அவன் போன தேரும் அங்கிருக்கிறது. அந்தத் தேர் முன்பெல்லாம் பகலில் எங்கே போனாலும் மாலையில் வீட்டு வாசலில் வந்து நிற்கும். மறுபடியும் அந்தக் காட்சியைக் கண்டு நம் கண் குளிரவேண்டும். காணப் போமா?" அவள் தொண்டை கரகரத்தது. கண்ணில் நீர் ததும்பியது.

இருவரும் சேர்ந்து தொழுதார்கள்; வாழ்த்தினார்கள். "கடவுளே, தண்துறை ஊரன் தேர் எம் முன்கடை (வாசல்) நிற்க அருள்புரிய வேண்டும்" என்று பிரார்த்தனை செய்தார்கள்.

## 4

மாலைக் காலம். இல்லத் தலைவியாகிய மடமங்கை விளக்கேற்றி வைத்தாள்; தெய்வத்தை வணங்கித் தொழுதாள்; வாழ்த்தினாள். தோழிமார் இருவரும் தூரத்தில் இருந்தபடியே அவளைக் கவனித்தார்கள். "நாம் கடவுளை வேண்டினோம். இவளும் வேண்டுகிறாள். இருசாராருடைய வேண்டுகோளும் கடவுள் காதில் ஏறாமற் போகுமா?" என்று சொல்லிக்கொண்டே கவனித்தார்கள்.

அவள் வேண்டுகோள் என்ன? அவர்கள் கூர்ந்து கேட்டார்கள். 'கடவுளே, என் தலைவன் மீண்டும் இங்கே வந்து விடவேண்டும்' என்றுதான் அவள் வேண்டுவாளென்பது அவர்கள் எண்ணம். ஆனால் அவள் வேண்டுகோள் வேறுவிதமாக இருந்தது. தன்னலத்தின் நிழல் ஓர் அணுக்கூட அதில் இல்லை.

அவள் வேண்டுகோள் என்ன? அவர்கள் காதிலே இப்போது தெளிவாக விழுந்தது.

"கடவுளே, நம்முடைய அரசனாகிய ஆதன் வாழ்க! அவினி வாழ்க! உலகத்தில் பசி இல்லை யாகுக! நோய்கள் யாவும் ஒழியவேண்டும்!" என்று அவள் செய்துகொள்ளும் வேண்டுகோள் அவர்கள் காதில் இன்னிசைபோல வந்து ஒலித்தது.

அவர்கள் வியப்பு மயமாகவே ஆகிவிட்டனர். 'இவள் நமக்குத் தாய் என்று இருந்தோம். நம் அரசனுக்குத் தாய் இவள்; நாட்டுக்குத் தாய்; உலகுயிர்க்கெல்லாமே தாய். அரசன் வாழ்ந்தால் நாட்டிலே பகையும் பிற இடையூறுகளும் வாராவென்று அவனை வாழ்த்துகிறாள். இயற்கை வளம் குன்றினால் பசி மிகுந்து உயிர்கள் வாடு

மென்று எண்ணிப் பசி இல்லையாக வேண்டுமென்று வாழ்த்துகிறாள். நோய் ஒழிகவென்று வாழ்த்துகிறாள். குழந்தையின் பசியும் நோயும் மற்றவர்களைக் காட்டிலும் தாய்க்குத்தானே வருத்தத்தை அளிக்கும்? மகன் வயிறு வாடக் காணாத உள்ளம் படைத்தவள் தாய். குழந்தையின் நோயைப் போக்கும்பொருட்டுத் தான் மருந்தருந்தும் தயை படைத்தவள் தாய். இவள் ஒரு குழந்தைக்காகக் கவலவில்லை. உயிர்கள் அனைத்தும் பகையின்றிப் பசியின்றிப் பிணியின்றி வாழவேண்டுமென்றல்லவோ வாழ்த்துகிறாள்? லோகமாதா இவள்!' என்று எண்ணி எண்ணி விம்மிதம் அடைந்தார்கள். "இவளை விட்டு வாழவும் அவன் மனம் துணிந்ததே!" என்று இரங்கினர்.

அவர்களுடைய வேண்டுகோள் பலித்தது. தலைவன் பரத்தையர் சூழலினின்றும் விடுபட்டான். தண்டுறையூரன் தேர் அவர்கள் வீட்டுக்கு முன்னே வந்து நின்றது. அறம் பழுத்த மனத்தினளாகிய அந்தப் பெண்தெய்வத்தின் தவம் பழுத்தது. வந்த தலைவனைச் சிறு முனகலும் இன்றி வரவேற்று உபசரித்தாள். முன்னையினும் பன்மடங்கு அன்பு செய்து இன்பம் ஊட்டினாள்.

அவன் இப்போது கடந்த நாட்களிலே தன் நெஞ்சை ஓட்டினான். 'இவ்வளவு அன்புடன் உள்ள இவளை நீத்து வாழ்ந்தோமே! என்ன மதியீனம்! எப்படி மறுகினாளோ!' என்று மிக மிக வருந்தினான்.

ஒரு நாள் ஒரு தோழியைத் தனியே கண்டு, "நான் பிரிந்திருந்த காலத்தில் நீங்கள் என்னைப் பற்றி என்ன நினைத்தீர்கள்? என்ன பேசினீர்கள்?" என்று கேட்டான்.

அவள் சிறிது யோசித்தாள். பிறகு சுருக்கமாக விடை சொன்னாள். அந்த விடை சுருக்கமாக இருந்தாலும் பொருளாழம் நிரம்பி, அவர்களுடைய நிலையையும் இயல்பையும் நன்றாக வெளியிட்டது. அந்த விடை இது தான்:

'வாழி ஆதன்! வாழி அவினி!
பசிஇல் லாகுக! பிணிசேண் நீங்குக!'
எனவேட் டோளே யாயே; யாமே,
'முதலைப் போத்து முழுமீன் ஆரும்
தண்துறை ஊரன் தேர்எம்
முன்கடை நிற்க!' எனவேட் டேமே.

—ஐங்குறுநூறு, 5.

[ஆதன் அவினி என்பவன் சேர வம்சத்தில் வந்த மன்னன். இல் ஆகுக—இல்லை ஆகட்டும். சேண் நீங்குக—தூரத்தில் சென்று ஒழியட்டும். வேட்டோள் - பிரார்த்தித்தாள். யாய் - எங்கள் தாய். ஆரும்-உண்ணும். முன்கடை-வாசலுக்கு முன்.]

# அன்புப் பார்வை

சோழ மன்னன் சிங்காதனத்தில் வீற்றிருந்தான். அருகில் அமைச்சர் அமர்ந்திருந்தனர். கலைவலாளரும் புலவரும் தமக்குரிய இருக்கையில் இருந்தனர். நாட்டு வளப்பத்தைப் பற்றியும் கலைச் சிறப்பைப் பற்றியும் மன்னன் உரையாட, மந்திரிமாரும் தகுதியறிந்து பேசினர். பேச்சு மெல்ல மெல்ல வேளாளரைப் பற்றிப் படர்ந்தது.

"இந் நாட்டின் நெல் வளத்தை உலகம் முழுவதுமே கொண்டாடுகிறது. சோணாடு சோறுடைத்து என்ற பழமொழியே இதற்கு அடையாளமாகும். இந்த நாட்டில் உள்ள வேளாளர்களின் செல்வச் சிறப்புக்கு ஈடாக வேறு எதையும் சொல்ல இயலாது. நம்முடைய பண்டாரத்தில் செல்வம் குறையினும் வேளாளர் செல்வம் என்றும் குன்றாதது" என்று மன்னன் பெருமிதத்தோடு பேசினான்.

"பரம்பரை பரம்பரையாக வேளாளர் கொடுக்க, முடியை வாங்கிச் சூட்டிக்கொள்ளும் வழக்கம் சோழ குலத்துக்கு உரியது. நாட்டின் பெருமையும், வளப்பமும் அவர்களால் அதிகமாகின்றன என்பதைத் திருவள்ளுவர் முதலிய புலவர்கள் அருமையாகச் சொல்லியிருக்கிறார்களே!" என்றார் ஓர் அமைச்சர்.

"இப்போதும் பிற நாட்டிலிருந்து வருவாருக்கும், இந்நாட்டுப் புலவருக்கும் அளவின்றி வாரி வழங்கும் வேளாண் செல்வர் பலர் இருக்கிறார்கள். நம் சடையப்ப

முதலியாரைப் போன்ற செல்வரையும் வள்ளலையும் வேறு எந்த நாட்டிலே பார்க்கமுடியும்?"

"சடையப்ப வள்ளல் நல்ல கலையுணர்ச்சி உள்ளவர். தமிழுக்கு அடிமையாகி விடுபவர். கலைத் திறமை உள்ளவர்களைக் கண்டால் அன்னையினும் அன்புவைத்துப் பாது காப்பவர். ஒரு மாதத்துக்கு முன் அவருடைய கலையுணர்வையும் செல்வப் பெருமையையும் தெரிவிக்கும் செய்தி ஒன்று நிகழ்ந்தது. அது மன்னர்பிரான் திருச் செவியை எட்டி யிருக்கக் கூடும்" என்றார் வேளாளராகிய அமைச்சர் ஒருவர்.

"என்ன அது?" என்று ஆர்வத்தோடு வினவினான் வேந்தன்.

"வடநாட்டிலிருந்து அருமையான துகில் ஒன்று கொணர்ந்தான், ஒரு வணிகன். அது மிக மெல்லியதாய் அருமையான பூவேலைப்பாடு உடையதாய் இருந்தது. சரிகையால் கரையிருந்தால் உறுத்துமென்று பட்டாலே பூத்தொழில் செய்திருந்தான். பலகாலம் முயன்று நெய்த அதைத் தக்க விலைக்கு விற்கவேண்டுமென்று எண்ணின அவன், தமிழ் நாட்டில் விலைபோகும் என்று வந்தானாம்."

அரசன் இடை மறித்து, "அவன் நம்மிடம் வரவில்லையே!" என்றான்.

"சடையப்ப வள்ளலைப் பற்றிக் கேள்வியுற்றுவிட்டால், ஒருகால் இங்கே வந்திருக்கக்கூடும். ஆனால் அவன் அப் பெரியாரிடம் சென்றதனால் சோழ நாட்டின் பெருமை எங்கும் பரவ இடம் உண்டாயிற்று" என்றார் அமைச்சர்.

"நீங்கள் சொல்வது விளங்கவில்லையே!" என்று கேட்டான் சோழமன்னன்.

"இந்த ஆடையை விலை கொடுத்து வாங்குவார் உலகத்திலே சிலர்தாம் இருக்கக்கூடும். பல நாடுகளில் திரிந்து ஒருவரையும் காணமல் இங்கே வந்தேன். இதை நெய்ய மேற்கொண்ட உழைப்புக்கு மேலே, விற்பதற்காகத் திரியும் சிரமம் அதிகம் என்று கூறிக்கொண்டு வந்த அந்த வணிகனைச் சடையப்பரிடம் சிலர் அழைத்துச் சென்றார்களாம். அவர் அந்தத் துகிலைப் பார்த்ததும் அதன் வேலைப்பாட்டை உணர்ந்துகொண்டார். அந்தக் கலைஞனைப் புகழ்ந்தார். அவன் கேட்பதற்கு மேற்பட்டே பொன் தந்தாராம்."

"இப்போது அந்தக் கலைஞன் எங்கே?"

"ருசி கண்ட பூனை உறியை எட்டி எட்டித் தாவும் என்பதுபோல, இன்னும் சிரமப்பட்டு இத்தகைய ஆடைகளை நெய்து, தமிழ் நாட்டில் விலைப்படுத்தலாம் என்று எண்ணிப் போயிருப்பான்."

"சோழ நாட்டின் பெருமையை அவன் மற்ற நாட்டில் போய்ச் சொல்லுவான் என்றது இதனல்தானே?"

"அதுமட்டும் அல்ல; சோழ நாட்டில் உள்ள ஒரு குடிமகனரே இதற்கு விலை கொடுத்தாரென்றால், அத்தகைய பலர் வாழும் சோழ நாட்டுக்கு அரசராக வீற்றிருப்பவர் எத்தனை செல்வராக இருப்பாரென்று அவன் வியப்புற்றுணும்."

அரசன் புன்னகை பூத்தான். பிறகு, "அந்தத் துகிலை நாமும் பார்க்க விரும்புகிறோம். சடையப்ப முதலியாரை வருவித்து அளவளாவும் ஒரு சந்தர்ப்பம்

கிடைக்கும்" என்றான். அரசன் குறிப்பை அறிந்த அமைச்சர் சடையப்ப வள்ளலுக்கு அழைப்பு விடுத்தனர். அப்போது அவர் தொடையில் ஒரு சிலந்தி உண்டாகி அதனால் எங்கும் செல்ல முடியாமல் இருந்தார்.

இந்தச் செய்தியைக் கேட்ட சோழ மன்னனுக்கு, அந்த நுண்துகிலைப் பார்க்கும் ஆர்வமும், முதலியார் விரைவிலே குணமடைய வேண்டும் என்ற விருப்பமும் அதிகம் ஆயின.

முதலியாருடைய சிலந்தி ஓரளவு குணமாயிற்று. அரசன் அழைத்தபோதே செல்லவேண்டும் என்ற மனவேகம் அவருக்கு இருந்தது. ஆனால் உடல் நிலை இடம் கொடுக்கவில்லை. மெல்ல மெல்ல நடக்கலாம் என்ற தைரியம் வந்தவுடன், அரசவைக்கு வருவதாகச் சொல்லி அனுப்பினார். அரசனும் பிறரும் அவர் வருகையை ஆவலோடு எதிர்பார்த்திருந்தனர்.

வழக்கப்படி தக்க கையுறைகளோடு சடையப்பவள்ளலார் அரசனது ஆஸ்தானத்தில் புகுந்தார். அரசன் அன்பு ததும்ப, "வாருங்கள் வாருங்கள். உடம்பு எப்படி இருக்கிறது? இங்கே அமருங்கள்" என்று உபசரித்தான். வள்ளல் மன்னனுக்கு அருகே ஓர் ஆசனத்தில் அமர்ந்தார். அவர் உடம்பு முழுவதையும் பார்த்தான் அரசன். பின்பு அவர் உடுத்திருந்த துகிலைப் பார்த்தான். பெரு விலை கொடுத்து வாங்கிய அற்புதமான ஆடைதான் அது. மிக மிக மெல்லியதாக இருந்தது. உடம்பு தெரியும்படி இருந்தாலும், சில சில இடங்களில் பூ வேலை செய்து கவசம் இட்டாற்போல் அமைந்திருந்தது. அதையே உற்றுக் கவனித்துக் கொண்டிருந்த மன்னனிடம், "அவ்வளவு

கூர்மையாக மன்னர் பிரான் எளியேனைப் பார்ப்பது என்னைக் கூசச் செய்கிறது'' என்றார் முதலியார்.

"இந்த ஆடையின் வரலாற்றைக் கேட்டோம். சிலந்தி வலை பின்னியதுபோல் இருக்கும் இது, உண்மையிலே சிறந்த துகில்தான். உங்கள் தொடையில் சிலந்தி வந்ததாமே; சிலந்தியிருந்த இடத்தில் சிலந்தி நூல் போன்ற இது இருப்பது பொருத்தமாக இருக்கிறது. நல்ல வேளை! சிலந்தி போய்விட்டதல்லவா?''

அமைச்சர் அரசனது சாதுரியத்தை அறிந்து மனத்துள் வியந்தனர்.

"சிலந்தியின் தொல்லை இன்னும் சிறிது இருக்கிறது'' என்றார் முதலியார்.

"அடடா! அப்படியானால் ஏன் அவசரப்பட்டு இங்கே வரவேண்டும்? உங்கள் மேனிக்குத் துன்பம் உண்டாக்கும் அந்தச் சிலந்தியைப் பார்க்கவேண்டுமென்று தோன்றுகிறது. ஆனால் தொடையிலல்லவா இருக்கிறது?''

"என் தாய் கூறுவது போலல்லவா அரசர் பெருமான் அன்புரை இருக்கிறது? இத்தனை உள்ளன்புடையார் விருப்பத்தை நிறைவேற்றுவது என் கடமை.''

அமைச்சர்களுக்கு ஒன்றும் விளங்கவில்லை. திடுக்கிட்டார்கள்.

"மன்னர் பிரானுடைய திருஷ்டி பட்டால் கொஞ்ச நஞ்சம் இருக்கும் புண்ணும் ஆறிப்போகும்'' என்றார் முதலியார்.

மன்னனுக்கே, ஏன் இப்படிச் சொன்னோம் என்ற சங்கடம் உண்டாகிவிட்டது.

"அரசர்பிரான் திருவுள்ளப்படியே அந்தப் புண்ணைக் கண்ணால் குளிர்ந்து பார்த்துப் போகட்டும்."

"இவ்வாறு சொன்ன முதலியார் உடனே துடையில் சிலந்தி இருந்த பக்கத்தைச் சிறிதளவு கிழித்தார். இரண்டு கைகளாலும் துகிலைப் பற்றி அந்தத் துவாரத்தின் வழியே, ஆறிவரும் புண் தெரியும்படிச் செய்தார். மன்னனுக்குத் தூக்கி வாரிப்போட்டது. புண்ணைக் கண்டல்ல. அத்தனை பொன் கொடுத்து வாங்கிய ஆடையை, மிகவும் அலட்சியமாகக் கிழித்துவிட்டதைக் கண்டு திடுக்கிட்டான். அமைச்சரும் பிறரும் ஒரே ஆச்சரியத்தில் மூழ்கினர்.

"என்ன, இதைக் கிழித்துவிட்டீர்களே!" என்றான் அரசன்.

"ஏன், மன்னர்பிரானுடைய தாயன்பு தழுவிய பார்வைக்கு இது எம்மாத்திரம்?"

"இவ்வளவு அருமையான வேலைப்பாடுடைய இது வீணாயிற்றே!" என்று இரங்கினான் சோழ வேந்தன்.

"இதைப்போல் ஆயிரம் வாங்கலாம்; மன்னர்பிரானுடைய அன்பை வாங்க முடியுமா?" என்றார் முதலியார்.

* * *

இந்த நிகழ்ச்சியை,

உள்ளற் கரிய துடையாடை கீறிய தொன்றுமொரு
வள்ளல் தகைமையொ டொத்துளதால்

என்று தொண்டை மண்டல சதகமும்,

தொடையில் எழுசிலந்தி தோற்றுவிக்கப் பட்டின்
புடைவை கிழித்த பெருங்கை

என்று இருக்கை வழக்கமும் பாராட்டுகின்றன.

# புலவர் செய்த சோதனை

“கொங்கு நாட்டிலிருந்து ஒரு புலவர் வந்திருக்கிறார். ஆனூரில் உள்ள சர்க்கரை என்ற வள்ளலின் ஆஸ்தான வித்துவானாம்” என்று அறிவித்தான் காவலன்.

“புலவரா! அவரை நான் அல்லவா எதிர்கொண்டு அழைக்கவேண்டும்?” என்று சொல்லியபடியே அந்தச் செல்வர் தம்முடைய வீட்டு வாசலுக்கே வந்துவிட்டார்.

புலவரும் உபகாரியும் சந்தித்தார்கள். இருவரும் மாளிகையின் உள்ளே சென்றார்கள். செல்வர் புலவருக்கு உபசாரம் செய்து அமரச் செய்தார். இருவரும் உரையாடத் தொடங்கினர்.

தொண்டை நாட்டில் உள்ள செங்குன்றூர் என்ற ஊரில் வாழ்ந்து வந்த எல்லப்பர் என்னும் வள்ளல் அச்செல்வர். புலவர்களின் பெருமையை அறிந்து பாராட்டிப் பரிசளிக்கும் பெருந்தகை. தமிழ் நயந் தேரும் சதுரர். அவருடைய புகழ் தமிழ்நாடெங்கும் பரவியிருந்தது. வேறு ஊர்களில் உள்ள புலவர்கள் அவ்வப்போது அவரைத் தேடிக்கொண்டு வருவார்கள். அவருடன் பேசிப் பொழுது போக்குவதிலே இன்பம் காண்பார்கள். அவர் அளிக்கும் பரிசைப் பெற்று அளவற்ற மகிழ்ச்சியுடன் ஊர் செல்வார்கள்.

எப்போது பார்த்தாலும் புலவர்களைப் பராமரிப்பதும் தான தர்மம் செய்வதுமாகப் பொழுது போக்கும் எல்லப்பரைப் புலவர்கள் சும்மா விட்டு வைப்பார்களா?

நன்றியறிவு மீதூரக் கவிபாடி அவர் புகழை வளர்த்தார்கள். அவர்கள் பாடிய பாடல்கள் தமிழ்நாடெங்கணும் உலவிச் செங்குன்றூர் எல்லப்பருடைய வள்ளன்மையைத் தெரிவித்தன.

"ஆலமரம் இருக்கும் இடத்தில் பறவைகளைப் பார்க்கலாம். திருமால் இருக்கும் இடத்தில் திருமகளைக் காணலாம். எல்லப்பன் இருக்கும் இடத்தில் இரவலரைக் காணலாம்" என்று ஒரு புலவர் பாடினார்.

* ஆல்எங்கே அங்கே அரும்பறவை; ஆல்துயிலும்
மால்எங்கே அங்கே மலர்மடந்தை—சோலைதொறும்
செங்கே தகைமணக்கும் செங்குன்றை எல்லன்எங்கே
அங்கே இரவலர்எல் லாம்.

எல்லப்பரைப் போலவே தமிழருமை அறிந்து புலவரைப் போற்றிப் புகழ் பெற்றவராக விளங்கினார், ஆனூர்ச் சர்க்கரை என்ற உபகாரி. கொங்குநாட்டில் மாடுகளுக்குப் பெயர் போன பழைய கோட்டை என்ற ஊர் இருக்கிறது. அதற்கு அருகில் இருப்பது ஆனூர். அவ்வூரில் இருந்தவர் சர்க்கரை. ஆனூர்ச் சர்க்கரையின் ஆதரவில் பல புலவர் தமிழ் வளர்த்தனர். அவர்களில் ஒருவரே தொண்டை நாட்டுக்குச் சென்று அங்குள்ள தமிழ்ப் பெருமக்களைக் கண்டு வரலாம் என்று புறப்பட்டார். தமிழ்நாடு முழுவதும் போற்றிப் புகழும் எல்லப்பரைக் காண்பதையே முக்கியமான காரியமாக வைத்துக் கொண்டார். ஆனூர்ச் சர்க்கரையைப் போன்ற தர்மவானை எங்கும் காணமுடியாது என்பது அவர் கருத்து. சர்க்கரையின் தமிழ் ஆசை ஒருபுறம் இருக்க, அவருடைய நற்குணங்களைப் பார்த்து வியப்பவர் பலர். அவருடைய

*மால்—மகா விஷ்ணு. கேதகை—தாழம்பூ.

பொறுமையை வேறு எவரிடமும் காண்பது அரிது. உடல் வலியும் உள வலியும் ஒருங்கே அமைந்த அவ்வுபகாரியின் பொறுமை புலவர் பாராட்டுக்கு உரியதாயிற்று.

"நம்முடைய சர்க்கரையைப் போல இனிப்பவர் யாரும் இல்லை. அவருடைய பொறுமைக்குப் பூமியும் நிகர் இல்லை" என்ற எண்ணத்தில் ஊறிய புலவர், செங்குன்றூர் எல்லப்பரிடத்தில் உள்ள பொறுமையையும் சோதிக்க எண்ணினர்.

புலவரும் எல்லப்பரும் பேசிக் கொண்டிருந்தனர். இரண்டு மூன்று நாள் புலவரைத் தங்கச் செய்து அளவளாவினர் எல்லப்பர். பிறகு புலவர் விடைபெற்றுக்கொள்ளும்போது அவ்வுபகாரி, பரிசில் வழங்கினர். புலவர் அதைத் தம் இடது கையை நீட்டி வாங்கினர். அப்போது அருகில் இருந்தவர் திடுக்கிட்டனர். 'கொங்குப் புலவருக்கு மரியாதை தெரியவில்லையே! இடது கைக்கும் வலது கைக்கும் வித்தியாசம் தெரியாத இந்த முரட்டு மனிதர் தமிழ்ப் புலவரென்று சொல்லிக் கொள்ளும் தகுதியில்லாதவர்' என்று சிலர் எண்ணினர்.

எல்லப்பருக்கும் புலவர் செயல் தவருகவே பட்டது. அவர் கண்கள் சிவந்தன. "இடது கையால் வாங்குவது தான் கொங்கு நாட்டார் வழக்கமோ?" என்று படபடப்புடன் கேட்டார். புலவர் யோசனை சிறிதுமின்றிப் புன்முறுவல் பூத்தபடி உடனே விடை கூறினர்: "வலது கை ஆனூர்ச் சர்க்கரையின் அன்புப் பரிசிலைப் பெறும் தனி உரிமையை உடையது. அவர் முன் நீட்டுங் கையைப் பிறர் முன் நீட்டுவதில்லை என்ற விரதம் உடையவன் நான். புலவர் பரிசில் பெறுவது முக்கியமே ஒழிய வலக்கையில் தான் பெறவேண்டும் என்ற வரையறை தொண்டை நாட்

டுச் சான்றோருக்கு இருக்க நியாயம் இல்லையே! ஆனூர்ச் சர்க்கரை, புலவர் தவறு செய்தாலும் பொறுக்கும் இயல்புடையவர். அவரிடத்தில் பழகியவர்களுக்கு இடக்கையென்றும் வலக்கையென்றும் தெரிவதில்லை. தாய் அணைப்பில் உள்ள குழந்தையைப்போல நாங்கள் ஆகிவிடுகிறோம்.''

உபகாரி ஒருவாறு அமைதி பெற்றார். விடை பெற்றுக்கொண்டு சென்றார் புலவர். அவரை வழிவிடச் சென்றார், எல்லப்பருடைய ஆஸ்தானப் புலவர்.

"திருமகளைப் பக்தியுடன் பீடத்தில் எழுந்தருளச் செய்யவேண்டும். அழுக்கிடத்தில் அமரச் செய்யக் கூடாது. உபகாரி தரும் பரிசு லக்ஷ்மியைப் போன்றது. வலது கையால் வாங்குவதற்குரியது'' என்று தொண்டை நாட்டுப் புலவர் சொன்னார். அவருக்குக் கொங்குப் புலவர் செயல் சகிக்கவில்லை. அதனால் மனம் புண்பட்டிருந்தது. காரமாகப் பேசி விடவேண்டுமென்றே அவருடன் வழி விட வந்தார்.

அவர் பேச்சைக் கேட்ட கொங்குப் புலவர், "மோதிரம் இடது கையில் அணிவதில்லையா? இரு கையாலும் வாரி வழங்குவதும், ஆசையோடு இரு கையாலும் அதைப் பெறுவதும் நீங்கள் பார்த்ததில்லையோ? அப்போது இடது கை ஏற்பதில்லையோ? என் கைக்கா பரிசில் தந்தார்? என் நாவன்மைக் கல்லவா பரிசில் கிடைத்தது? அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொல் என்ற நான்கும் இன்றித் தர்மம் செய்ய வேண்டுமென்று திருக்குறள் சொல்கிறதே. உங்கள் தலைவர் தமிழருமை அறிந்தவரே. ஆனாலும் வெகுளியை விலக்கவில்லை. அவர் எங்கள் சர்க்கரையிடம் பொறுமையைக் கற்றுக்கொள்ள வேண்டும்'' என்று சொல்லிவிட்டு அவர் தம் ஊருக்குச் சென்றுவிட்டார்.

## 2

தொண்டை நாட்டுப் புலவரின் மனத்தில் ஆனூர்ப் புலவரின் செயலும் சொல்லும் உறுத்திக்கொண்டே இருந்தன. 'மரியாதையற்ற காரியத்தைச் செய்துவிட்டுக் கோபம் வரக் கூடாதென்று சொல்வது முட்டாள்தனம் அல்லவா?' என்று எண்ணினார். எப்படியாவது அந்தப் புலவரையும், அவருக்கு அவ்வளவு இறுமாப்பு உண்டாகும்படி செய்த சர்க்கரையையும் அவமதிக்கவேண்டும் என்ற நினைப்பு அவருக்கு உண்டாகிவிட்டது.

புலவர் கொங்கு நாட்டை நோக்கிப் புறப்பட்டார். ஆனூருக்குப் போய்ச்சேர்ந்தபோது, முன்பு அறிந்திருந்த புலவர் அவரை வரவேற்றார். சர்க்கரையின்முன் அழைத்துச் சென்றார். இன்னுரையும் புன்னகையுங் கொண்டு சர்க்கரை புலவரை வரவேற்றார். விருந்து அருந்தச் செய்தார்.

தொண்டை நாட்டுப் புலவருக்குச் சர்க்கரையைச் சோதிக்கவேண்டும் என்ற நோக்கம் மேலிட்டது. அவ்விடத்துப் புலவரிடம் பேசிக்கொண் டிருக்கையில், "உங்கள் தலைவர் பொறுமை நிறைந்தவர் என்பதை நான் எப்படி அறிவது?" என்று கேட்டார்.

"எப்படி வேண்டுமானாலும் அறியலாம். புலவர் எது செய்தாலும் சிறப்பாக நினைப்பவர் அவர்; நயத்தக்க நாகரிகம் உணர்ந்தவர்" என்றார்.

அன்று சிறந்த விருந்துக்கு ஏற்பாடாகியிருந்தது. தொண்டை நாட்டுப் புலவரும் கொங்கு நாட்டுப் புலவரும் சர்க்கரையும் வேறு சிலரும் அமர்ந்து விருந்துண்ணலாயினர். புலவரை உபசரிக்கும் பேற்றைத் தாமும் பெற

வேண்டும் என்ற ஆர்வத்தால் சர்க்கரையின் மனைவியும் தாயும் உணவு பரிமாறினர். தொண்டை நாட்டுப் புலவருக்கு உணவின்மேல் மனம் செல்லவில்லை. சர்க்கரையைச் சோதிக்க என்ன வழி என்ற யோசனையில் ஆழ்ந்திருந்தார். அப்போது, சர்க்கரையின் அன்னை ஏதோ ஒன்றைப் பரிமாறிக்கொண்டிருந்தாள்.

திடீரென்று புலவர் வெறி பிடித்தவரைப்போல எழுந்தார். சர்க்கரையின் அன்னை குனிந்து பரிமாறுகையில் சட்டென்று அவள் முதுகின்மேல் ஏறி அமர்ந்தார். விருந்துண்பவர் யாவரும் பிரமிப்படைந்தனர். அன்னையோ சர்க்கரையின் பக்கம் தன் பார்வையைத் திருப்பினாள். அவ் வள்ளல் புன்முறுவல் பூத்தார். "என்னை அன்போடு பத்து மாதம் சுமந்தாயே. இந்தத் தமிழ்க் குழந்தையை ஒரு நிமிஷம் சுமப்பதில் வருத்தம் என்ன?" என்று சாந்தமாகச் சொன்னார்.

அடுத்த கணத்தில் புலவர் கீழே குதித்தார். சர்க்கரையின் முன்னாலே நெடுஞ்சாண் கிடையாக விழுந்தார். "நான் செய்த பிழையைப் பொறுக்கவேண்டும். உங்களை நான் தெரிந்து கொள்ளவில்லை. நீங்கள் கர்ணனென்று சொன்னார்கள். உலகில் எவ்வளவோ கர்ணர்களைக் காணலாம். உங்களைத் தர்மபுத்திரரென்றே நான் எண்ணுகிறேன்" என்று விம்மி விம்மி உருகிச் சொன்னார்.

கொங்குப் புலவர், "புலவரே, சர்க்கரையைக் குழந்தையாகப் பெற்ற அன்னைக்கு இன்று மற்றொரு குழந்தை கிடைத்தது ஆச்சரியம். அந்தக் குழந்தை அன்னைக்கு முன்னே அழுதுநிற்பது அதைவிட ஆச்சரியம்!" என்று உணர்ச்சிப் பூரிப்பிலே பேசினார். புலவர் செய்த பைத்

தியக்காரச் செயலைவிட வள்ளலின் உயர் குணத்தையே அங்குள்ளவர்களின் உள்ளங்கள் எண்ணி உருகின.

தொண்டை நாட்டுப் புலவர் சர்க்கரையின் பொறுமையை இப்போது அறிந்து கொண்டார். தமிழ்ப் புலவர்களிடம் அவருக்குள்ள அன்புக்கு எல்லை காண முடியாதென்பதைப் பிரத்தியட்சமாகவே தெளிந்தார். பின்னும் சில நாட்கள் ஆனூரில் தங்கினர். அப்பால் சர்க்கரை தந்த பரிசில்களைப் பெற்று ஊருக்குத் திரும்பினர்.

## 3

அவர் தம் ஊரை விட்டுப் புறப்பட்டபோது ஆத்திரத்தில், தம் உடன் இருந்தவர்களிடம் தம்முடைய எண்ணத்தை வெளியிட்டிருந்தார். சர்க்கரையைச் சோதிக்கச் செல்வதாகச் சொல்லியிருந்தார். இந்தச் செய்தி எல்லப்பர் காதுக்கும் எட்டியது. ஆகவே புலவர்களும் எல்லப்பரும் அவருடைய வருகையை எதிர்நோக்கி யிருந்தார்கள்.

புலவர் வந்தார். "போன காரியம் என்ன ஆயிற்று?" என்று நண்பர்கள் கேட்டார்கள். அவர்களோடு பேச அவருக்கு மனம் இல்லை. நேரே வேகமாக எல்லப்பரிடம் சென்றார்.

"பல காலமாக உங்களைப் போன்ற உபகாரி உலகத்திலேயே இல்லையென்று எண்ணிக்கொண்டிருந்தோம். உங்களையே பாடினேன். உங்களுக்கு இணையாக யாரும் இருக்கமாட்டார்களா என்று ஆராய்ந்தோம். யாரும் இல்லையென்ற முடிவுக்கு வந்திருந்தோம். இப்போது ஒருவரைக் கண்டேன். எனக்கு ஒரு தாயையும் அண்ணையும் கண்டு கொண்டேன்" என்று அவர் பேசினர்;

பாராட்டினார்; போய் வந்த கதையைச் சொன்னார். அவர் உள்ளத்திலே ஏற்பட்ட உவகை ஒரு தமிழ்ப் பாடலாக உருவெடுத்தது.

செங்குன்றை எல்லாயின் செங்கைக் கொடையதனுக்கு
எங்கெங்கும் தேடி இணைகாணோம்—கொங்கதனில்
சர்க்கரையைப் பாடலாம்; தண்டமிழ்க்கோன் நீயாத
எக்கரையாம் பாடோம் இனி.

அதைக் கேட்ட எல்லப்பருக்கும் சர்க்கரையின் புகழ் இனித்தது. புலவர் செய்த சோதனையில் வென்ற சர்க்கரையின் புகழைக் கொங்கு மண்டலத்தோடு தொண்டை மண்டலமும் பிற மண்டலங்களும் பாராட்டின.

# சேதுபதியின் மோதிரம்

கையை அசைத்துத் தொட்டிலை ஆட்டிக்கொண்டே நாவையும் அசைத்துப் பாடிக்கொண்டிருந்தாள், அந்தப் பெண்மணி. முகத்திலே பொலிவின்றி, உடம்பிலே உரமின்றி, கழுத்திலே மங்கலமின்றி நின்றிருந்த அந்த மடந்தைக்கு நாவிலே மாத்திரம் இனிமையும் வன்மையும் இருந்தன. தொட்டிலிலே கிடந்த சின்னஞ் சிறு குழந்தையை ஆர்வம் பொங்கப் பார்த்தபடியே அவள் தாலாட்டிக்கொண்டிருந்தாள்.

அவள் உள்ளத்தில் என்ன என்ன நினைவுகள் ஓடினவோ, யார் கண்டார்கள்? இடையிடையே ஒரு பெருமூச்சு, சிறிது நேரம் மௌனம், சிறிது முகத்திலே புன்சிரிப்பு, பிறகு சோக ரேகை, அப்பால் இரு கண்ணீர்த் துளிகள்—இப்படியாக அவள் உள்ளக் கற்பனைக்குப் புறத்தே சின்னங்கள் தோன்றின. அவற்றைக் கொண்டு அந்தக் கற்பனையை உருவாக்கினால் கவலையும் சோகமும் இனிமையும் கலந்த கதையாக ஆகலாம்.

இப்போது அவள் கணவனை இழந்த மங்கை; தன் வாழ்வுக்குத் தனிப் பற்றுக்கோடாக இதோ தொட்டிலில் கிடத்தியிருக்கிறாளே இந்தக் குழந்தையைத்தான் நம்பியிருக்கிறாள். பழங்காலக் கதையிலே உள்ளம் ஊடுருவிச் செல்லும்போது அவள் தன்னை மறக்கிறாள்; இப்போது நிற்கும்நிலை நினைவுக்கு வருகையில் அவள் சோகந்தேங்கும் கண், நீர்த்துளிகளைத் துளிக்கின்றது. அந்தச் சின்னஞ் சிறு குழந்தையின் இளங்கையிலே சிக்குண்ட எதிர்

காலத்தை நினைக்கையில் ஒன்றும் தெரியாமல் பெருமூச் செறிகிறாள்.

சேதுபதி மன்னருடைய ஆதரவு அவளுக்கு எப்போதும்போல் இருக்கிறது. ஆனாலும் அந்த ஆதரவு இரக்கத்தின் விளைவாக எழுந்ததுதானே? அவளுடைய கணவர் அமிர்த கவிராயர் வாழ்ந்த காலத்தில் அவள் பெற்ற இன்ப வாழ்வு என்ன! இப்போது அவள் நிர்க்கதியாக நிற்கவில்லையே தவிர, நாள்தோறும் அமிர்த கவிராயருடைய அமுதக் கவியிலே உள்ளம் பறிகொடுத்த உற்சாகத்தில் சேதுபதி தந்த சம்மானங்களைப் பெற்று வாழ்ந்த வாழ்வு ஆகுமா?

அந்தக் காலம் இனிமேல் வருமா? ஒரு துறைக் கோவையென்று புலவர் உலகத்திலே பேச்சு வந்தால் அது ரகுநாத சேதுபதியின் ஒரு துறைக்கோவையைத் தானே இன்றும் குறிக்கிறது? புலவர் ஆளுக்கோர் ஒரு துறைக்கோவை பாடினாலும் இதற்குச் சமானம் ஆகுமா?

அவள் நினைத்துப் பார்க்கிறாள். நானூறு பாட்டுக்கும் சேதுபதி மகாராஜா நானூறு பொன் தேங்காயை உருட்டி விட்டாரே! இதைக் கதையிலே கூடக் கேட்டதில்லையே! இடையே ஒரு பாட்டைச் சொல்லும்போது, "இதை நன்றாக உடைத்துப் பார்த்து ரசிக்க வேண்டும்; மற்றப் பாட்டுகளைப் போல எண்ணக்கூடாது" என்று கவிராயர் சொன்னார். சுவையறியும் செம்மலாகிய அரசர் சொன்னதுதான் மிக மிக ஆச்சரியம். "தெரியும்; நமக்கு இதன் அருமை தெரியும் என்பதையும், இந்தப் பாட்டை உடைத்துப் பார்த்து இது மாணிக்கம் போன்ற பொருளை உடையதென்று உணர்ந்ததையும் இப்போது

உருட்டிய தேங்காய் சொல்லும்; அதை உடைத்துப் பார்த்தால் தெரியும்'' என்று மன்னர் சொன்னார். தேங்காயை உடனே உடைத்துப் பார்த்தால், உள்ளெல்லாம் மாணிக்கக் கற்கள்! அந்த மாதிரி நிகழ்ச்சி உலகத்திலே சில காலங்களில்தான் நிகழக்கூடும்.

அந்தக் கவிராயரைப் பிரிந்து அவள் வாழ்வது கிடக்கட்டும்; "பாட்டுக் கிசைந்த ரகுநாத சேதுபதி" எப்படி வாழ்கிறார்? சேது சம்ஸ்தானத்தில் கவிராயர் பலர் உண்டு; வெளியூரிலிருந்தும் வருவார்கள். ஆனால் அமிர்த கவியின் அமுதகவி இருந்தால்தான் அரசருக்கு இன்பம் நிறைவடையும்.

இந்தப் பழங்கதையையெல்லாம் அவள் நினைத்துப் பார்த்தாள். அந்த நினைவுலகத்திலிருந்து நிஜ உலகத்துக்கு இறங்கி வருகையில் நிலை குலைந்து பெருமூச்சு விடுகிறாள். வேறு என்ன செய்வாள் பாவம்!

கவிராயர் மனைவியை ரகுநாத சேதுபதி அருமையாகப் பாதுகாத்து வந்தார். கவிராயர் இல்லாத குறையைத் தவிர அந்தப் பெண்மணிக்கு வேறு ஒன்றாலும் குறை வைக்கவில்லை. அந்த அம்மைக்குத் தன் குழந்தையிடம் இருந்த வாத்ஸல்யம் பெரிதுதான்; ஆனாலும் அமிர்த கவிராயர் கான்முளை வருங்காலத்தில் அவர் பெயரைக் காப்பாற்றுவான், சம்ஸ்தானத்துக்குப் புகழ் உண்டாக்குவான் என்ற ஆர்வத்தோடு சேதுபதி அந்தக் குழந்தையைப் பாதுகாக்க வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்தாரே; அது மாத்திரம் சாமானியமான அன்பா?

அரண்மனைக்கு அருகில் அந்த வீடு இருந்தது. கவிராயருடைய மனைவி ஒரு கிழவியோடு வாழ்ந்து வந்தாள்.

கூடத்திலே தொட்டிலைக் கட்டி அதிலே குழந்தையை விட்டுத் தாலாட்டிக் கொண்டிருந்தாள். கூடத்துச் சுவரின் சாளரத்து வழியே பார்த்தால் அரண்மனையின் மேற்பகுதி தெரியும்.

பழைய ஞாபகத்திலே தோய்ந்தெழுந்த உள்ளத்தில் உற்சாகம் பிறக்கும்; உடனே தன்னையும் அறியாமல் உச்ச ஸ்தாயியிலே அவள் தாலாட்டைப் பாடுவாள்.

அப்போது அவள் கண்ணில் திடீரென்று ஒரு மருட்சி தோன்றியது. தொட்டிலின் மேல் அவள் கண் ஓடியது; அப்பால் சுவரிலே பாய்ந்தது; சாளரத்திலே சென்றது; அதனூடே கூர்ந்து கவனித்தது. சாளரத்தின் வழியே வந்த ஒரு பிரகாசந்தான் அவளை அப்படிப் பார்க்கச் செய்தது. ஒளிக்கதிர் தொட்டிலின் மேலே விழுந்ததை அவள் கண்டாள். சாளரத்தின் வழியே அந்தக் கதிர் வந்தது. எங்கிருந்து வந்ததென்று ஆராய்ந்தாள்.

அரண்மனையின் மேல் மாடியிலே ரகுநாத சேதுபதி கைபிடிச் சுவரின்மேலே சாய்ந்துகொண்டு தாலாட்டுப் பாட்டைக் கேட்டு ரசித்துக்கொண்டிருந்தார். கைபிடியின் மேல் வைத்த கையில் மிக உயர்ந்த கற்கட்டு மோதிரம் அணிந்திருந்தார். எதிரே வீசிய சூரியனது கதிர் அதிலே பட்டுப் பளபளத்தது. அதிலிருந்து கிளம்பிய கதிர் அவர் உள்ளத்தைப் போலச் சாளரத்தின் வழியே புகுந்து தொட்டிலிலே படர்ந்தது.

கவிராயர் மனைவி உண்மையை உணர்ந்தாள். ஆனாலும் அதைத் தெரிந்துகொண்டதாகக் காட்டிக் கொள்ளவில்லை. பழைய ஞாபகங்களைச் சற்று மறந்து பாட்டிலே

கிலகொண்டாள். பழைய பாட்டோடு புதிய பாட்டையும் இணைத்துப் பாடினுள். கவிராயர் மனைவி அல்லவா ?

அதுவரையில் தம்மை மறந்து கவனித்துக் கொண்டிருந்த மன்னர் திடீரென்று உடம்பு குலுங்க நிமிர்ந்து நின்ருர். அவரைப் பாட்டின் ஒரு கண்ணி அப்படிச் செய்துவிட்டது. ஆம், அந்தப் பெண்மணி இதோ மூன்ரும் முறையாகப் பாடுகிருள்;

"திக்கெட்டும் போற்றிசெயும்
சேதுபதி ராஜேந்த்ரன்
கற்கட்டு மோதிரத்தைக்
கண்டாசைப் பட்டாயோ"

என்ற கண்ணி இப்போது தெளிவாக அவர் காதில் விழுந்தது. ஒவ்வொரு சொல்லும் மணி மணியாக அந்தப் பெண்ணின் வாயிலிருந்து உதிர்ந்தது; அப்போது அரசருடைய கண்ணிலிருந்து இரண்டு துளி நீர் உதிர்ந்தது.

"கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவிபாடும்" என்ற பழமொழி அவர் நினைவுக்கு வந்திருக்கவேண்டும். விறுவிறென்று இறங்கினுர். கீழே போய் ஓர் அழகிய தட்டில் பணமும் ஆடையும் வைத்தார்; தம் கையிலே இருந்த மோதிரத்தைக் கழற்றி அவற்றின் நடுவிலே வைத்தார். தக்க மனிதர் ஒருவரை அழைத்து, "இந்தாரும்; கவிராயர் மனைவியாரிடம் கொண்டு போய்க் கொடும். கற்கட்டு மோதிரத்தைக் கண்டு ஆசைப்பட்ட குழந்தைக்கு மகாராஜா சம்மானம் செய்திருக்கிருர் என்று சொல்லும்" என்று தழுதழுத்த குரலிலே கூறி அனுப்பினுர்.

"மகாராஜா உங்கள் குழந்தைக்குச் சம்மானம் இது என்று சொல்லி அனுப்பியிருக்கிருர்" என்ற வார்த்தைகளோடு அந்த முதியவர் கவிராயர் மனைவியின் முன்னே

நின்றார். அவள் இதை எதிர்பார்த்தவள் அல்லவே! மகாராஜா இருப்பதைத் தெரிந்துகொண்ட குறிப்பையல்லவா அவள் வெளியிட்டாள்? 'ஆனால், மகாராஜா, தமிழருமை தெரிந்த சேதுபதி இப்படியல்லவா செய்துவிட்டார்!'

அவளுக்கு நன்றியுரை கூற வாய் எழும்பவில்லை. தட்டோடு வாங்கிக் கண்ணில் ஒத்திக்கொண்டாள். அந்தக் கற்கட்டு மோதிரத்தைத் தனியே எடுத்து ஒத்திக்கொண்டாள். அது அவள் கண்ணீரினால் நனைந்து போயிற்று.

எதிரே நின்ற கிழவருக்கு ஒன்றுமே புரியவில்லை.

[இந்தக் கதையை எனக்குச் சொன்னவர் கோம்பை ஸ்ரீ க. சண்முகசுந்தரம் அவர்கள்.]

# பரதேசியின் உபாயம்

திருச்செந்தூர்க் கோயிலுக்குப் புதிய மானேஜர் வந்தார். தினந்தோறும் நூற்றுக் கணக்கான ஜனங்கள் பல இடங்களிலிருந்து வந்து செந்திலாண்டவனைத் தரிசித்துச் செல்வார்கள். காணிக்கை செலுத்துவார்கள். அபிஷேக ஆராதனைகள் மிக விமரிசையாக நடைபெறும்.

புதிய மானேஜர் நெற்றி நிறையத் திருநீறு பூசுகிறவர்; கழுத்தில் ஆறு முக ருத்திராட்சம் கட்டிக்கொண்டிருக்கிறவர். பார்த்தால் சிவப்பழமாகத் தோற்றம் அளிப்பார். ஆனால் அவர் வாயிலிருந்து வரும் வார்த்தை அந்தத் தோற்றத்திற்கு ஏற்றபடி இராது. கோயிலைத் தாமே தனியே நிர்வாகம் செய்து ஆண்டவனையே தாங்குபவரைப் போன்ற ஞாபகம் அவருக்கு. வருகின்ற அடியார்களிடம் அன்போடு பேசி, வேண்டிய சௌகரியம் செய்துகொடுக்கவேண்டியது அவர் கடமை. அப்படியில்லாமல் வாசலில் வேட்டை நாயைக் கட்டினதைப் போல் இருந்தது அவர் நிலை.

அடியார்கள் வந்தால், அது பண்ணக்கூடாது இது பண்ணக்கூடாது, அப்படிச் செய்யாதே இப்படிச் செய்யாதே என்று அதிகாரம் பண்ணி அதட்டுவார். பூசகர்களையும் ஏவலாளர்களையும் காரணம் இல்லாமல் கண்டித்து மிரட்டுவார். எந்தச் சமயத்திலும் கடுகடுவென்ற முகமும் சுடுகின்ற சொல்லும் உடையவராக இருந்தார்.

தரிசனத்துக்கு வருகிறவர்கள் இந்தப் பேர்வழியைப் பார்த்து மனம் வருந்தினர்கள். அவரோடு தினமும்

அவஸ்தைப்படும் கோயில் வேலைக்காரர்கள் பட்ட துன்பத்துக்கு முடிவே இல்லை. செந்திலாண்டவனிடம் ஆழ்ந்த பக்தி உடைய பரதேசிகள் சிலர் அந்தக் கோயில் வாசலில் இருந்து கிடைத்ததை உண்டுவிட்டு, ஆண்டவன் தரிசனத்தை நாள்தோறும் தவறாமல் செய்துகொண்டு வாழ்ந்தார்கள். அவர்கள் பாடு திண்டாட்டமாய்விட்டது. அவர்களுக்குக் கடுமையான நிபந்தனைகளை விதித்தார். வருகின்ற அடியார்களும் கோயிலைச் சார்ந்து வாழ்பவர்களும் இந்த மானேஜரால் படும் சங்கடங்களைச் செந்திலாண்டவன் பார்த்துக்கொண்டிருந்தான். மேலதிகாரிகள் காதுக்கு விஷயம் எட்டினால் ஏதாவது பரிகாரம் கிடைக்கக்கூடும். அந்தக் காலத்தில் அவ்வளவு சுலபமாக அவர்களுக்குக் குறைகள் தெரிய வழியில்லை.

மானேஜரின் கடுமை ஒரு பக்கம் இருக்கட்டும். யோக்கியதை எப்படி? அது மகாமோசம். வருகிற வரும்படியைக் கொள்ளை அடிப்பது, பொய்க் கணக்கு எழுதுவது, நிவேதனங்களைக் குறைப்பது, படித்தரங்களைக் குறைப்பது, வீணாக அபராதம் விதிப்பது முதலிய காரியங்களையும் அவர் செய்துவந்தார். "இந்த மகா பாபியையும் தெய்வம் பார்த்துக் கொண்டிருக்கிறதே!" என்று நல்லோர் வயிறு எரிந்தனர்.

அடியவர்களுக்கு உற்சாகம் இல்லை. திருட்டுத்தனமும் அதிகமாயிற்று. காணிக்கை குறைந்தது; வந்த காணிக்கை அவ்வளவும் கணக்குக்குப் போவதில்லை. உண்டியல் அடிக்கடி நிரம்புவது பழைய காலம்; இப்போது அது லேசில் நிரம்புவதில்லை. காணிக்கை போடும் வட்டைகள் சூன்யமாகிவிட்டன. கோயிலுக்கு இரண்டு யானைகள் இருந்தன. அவற்றிற்குப் போதிய உணவு போடாமல் இளைத்துவிட்டன.

ஆண்டவன் சந்நிதியில் உளமுருகித் திருப்புகழும் அலங்காரமும் பாடிப் பணியும் பரதேசி ஒருவர் இருந்தார். கோயில் போகும் போக்கைக் கண்டு உள்ளம் குமுறுகிற வர்களில் அவரும் ஒருவர். "ஆண்டவனே, சூரபன்மன் முதலிய அசுரர்களின் அக்கிரமங்களை அழித்த உன்னுடைய திருவருள் இந்த அரக்கனுடைய அக்கிரமத்தை எப்படித்தான் சகித்துக் கொண்டிருக்கிறதோ!" என்று மனசுக்குள்ளேயே சொல்லி வருத்தப்படுவார்.

நாளடைவில் திருச்செந்தூரில் நடைபெறும் இந்த விஷயங்கள் மேலதிகாரிகளுக்கு எட்டின. ஆனாலும் திட்டமாக இன்ன தவறு என்று யாரும் தெரிவிக்கவில்லை. என்னதான் நடக்கிறதென்று தெரிந்துகொள்ள எண்ணி மேலதிகாரி ஒருவர் திருச்செந்தூருக்கு வந்தார். அவர் வருவது எப்படியோ மானேஜருக்குத் தெரிந்துவிட்டது. எல்லாம் ஒழுங்காக நடப்பதுபோலக் காட்டுவதற்கு உரிய ஏற்பாடுகளைச் செய்து வைத்தார். கணக்குகளை ஒழுங்கு படுத்தி வைத்தார்.

அதிகாரி வந்தார். கோயிலைப் பார்வையிட்டார். பெரிய தவறு ஒன்றும் நேர்ந்ததாக அவர் கண்ணுக்குப் படவில்லை. சிலரை விசாரித்தார். மானேஜருடைய அதிகார மிரட்டலுக்கு உட்பட்ட அவர்கள் எல்லாம் ஒழுங்காக நடப்பதாகச் சொன்னார்கள். வேறு யாரும் அவரிடம் குறைகளை எடுத்துச் சொல்ல முன்வரவில்லை.

முன்னே சொன்ன பரதேசிக்கு இந்த நாடகத்தைக் கண்டு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. மேலதிகாரி வந்தும் கூட, நடக்கும் அக்கிரமங்களுக்கு ஒரு முடிவு ஏற்படாவிட்டால், அரக்க ராஜ்யம் நீடித்து நடக்கவேண்டியதுதான்! ஆகவே, எப்படியாவது துணிந்து, வந்திருக்கும்

அதிகாரிக்கு விஷயத்தை விளக்கவேண்டுமென்று தீர்மானம் செய்துகொண்டார். 'நமக்கு என்ன தீங்கு நேர்ந்தாலும் நேரட்டும். நம்மால் பலருக்கு நன்மை உண்டாகும்' என்ற துணிவு அவருக்கு உண்டாயிற்று. அடுத்த கணம் அவருக்கு ஓர் உபாயம் தோன்றியது. அப்படிச் செய்வதே சரியென்று நிச்சயப் படுத்திக்கொண்டார்.

அதிகாரி முருகன் சந்நிதியில் வந்து தரிசித்துக் கொண்டிருந்தார். அர்ச்சனை நடந்து கொண்டிருந்தது. அப்போது பரதேசி தூரத்தில் நின்றுகொண்டு தம்முடைய இனிய குரலில் திருப்புகழ் பாடத் தொடங்கினார். மிகவும் இனிமையாகவும் உருக்கமாகவும் பாடினார். அதிகாரியின் மனசை அந்தப் பாட்டு இழுத்தது. மற்றவர்களைப்பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. அதிகாரி ஆண்டவனைப் பார்ப்பதும், திரும்பிப் பரதேசியைப் பார்ப்பதுமாக நின்று கொண்டிருந்தார். அவருடைய கவனம் தம்மேல் விழுவது பரதேசிக்குத் தெரிந்தது. உடனே திருப்புகழை முடித்துவிட்டு, அலங்காரம் பாடினார். பிறகு வேறு ஏதோ பாட்டைப் பாட ஆரம்பித்தார். நிதானமாக வார்த்தைகள் தெளிவாக விளங்கும்படிப் பாடினார்.

கொட்டைகட்டி மானேஜர்
செங்கடுவாய் வந்தபின்பு
சுத்தவட்டை ஆனதென்ன
சொல்லாய் குருபரனே!

என்று பாட்டு வந்தது. அங்கிருந்த அத்தனை பேரும் அதைக் கவனித்தார்கள். அதிகாரி நன்றாகக் கேட்டார். மானேஜர் முதலில் கவனிக்கவில்லை. பரதேசி அழுத்தமாகச் சொற்களை உச்சரித்துத் திருப்பித் திருப்பிப் பாடினார். மானேஜர் என்ற வார்த்தை வேறு பாட்டில் வந்தது. ஆகவே அவரும் கவனித்தார்.

வேலவர்க்கு முன்னிற்கும்
வீரவாகு தேவருக்குச்
சாயரட்சைப் புட்டு
தவிடோ குருபரனே!

என்று இரண்டாவது கண்ணி வந்தது. அடியார்கள் ஆச்சரியத்தில் மூழ்கி ஸ்தம்பித்து நின்றார்கள். மானேஜர் முகத்திலே கடுகு வெடித்தது. உடம்பெல்லாம் வேர்வை வெள்ளம். அதிகாரி, பரதேசியின் சாதுரியத்தை வியந்தபடி விஷயத்தை உணர்ந்துகொண்டார். பரதேசி அதோடு நின்றாரா? மானேஜரின் அக்கிரமத்துக்குப் பெரிய சாட்சி, கோயில் யானைகள். உடம்பு மெலிந்துபோன அவற்றைப் பார்த்தால் உண்மை நன்றாக வெளியாகிவிடும் ஆனால் மானேஜர் அந்த இரண்டு யானைகளையும் அதிகாரியின் கண்ணில் படாதபடி எங்கோ அனுப்பிவிட்டார். வேறே கோயிலுக்குப் போயிருக்கின்றன என்று சாக்குச் சொன்னார். அந்த யானையின் விஷயத்தைப் பரதேசி அம்பலப்படுத்தினார்.

மாநிலத்தில் காய்கிழங்கு
வற்றலுண்டு செந்தூரில் - இரண்டு
ஆனைவற்றல் ஆனதென்ன
ஐயா குருபரனே!

இந்த மூன்றாவது கண்ணி மற்ற இரண்டையும் விட அதிகமாகச் செந்தூரின் நிலையைக் காட்டியது. ஜனங்கள் தம்மை அறியாமலே தங்கள் உணர்ச்சியை வெளிப்படுத்தினார்கள்.

அதிகாரி வந்த காரியம் நிறைவேறிவிட்டது. பரதேசியின் உபாயம் பலித்தது. அவர் குறைகளை உணர்ந்து கொண்டார். பிறகு—? அதையுமா சொல்லவேண்டும்?

# இலக்கிய ஆதாரங்கள்

புலவர் இட்ட சாபம் :

இந்தக் கதைக்கு மூலமானது, குறுந்தொகை 292-ஆம் பாட்டு.

மண்ணிய சென்ற ஒண்ணுதல் அரிவை
புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு
ஒன்பதிற் றொன்பது களிற்றொ டவள்நிறை
பொன்செய் பாவை கொடுப்பவுங் கொள்ளான்
பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரையத்துச் செலீஇயரோ அன்னை
ஒருநாள், நகைமுக விருந்தினன் வந்தெனப்
பகைமுக ஊரிற் றுஞ்சலோ இலனே.

நன்னனுடைய காவல்மரமாகிய மாவைக் கோசர் வெட்டினர் என்பது குறுந்தொகை, 73-ஆம் பாடலால் தெளிவாகும்.

மகிழ்நன் மார்பே வெய்யை யால்நீ
அழியல் வாழி தோழி நன்னன்
நறுமா கொன்று நாட்டிற் போகிய
ஒன்றுமொழிக் கோசர் போல
வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமாற் சிறிதே.

இந்த இரண்டு பாடல்களும் பரணர் பாடியவை.

ப. 16. பெருந்தலைச் சாத்தனர் பாடியது, புறநானூற்றில் 151-ஆம் பாடலாக உள்ளது.

பண்டும் பண்டும் பாடுநர் உவப்ப
விண்தோய் சிமைய விறல்வரைக் கவாஅற்
கிழவன் சேட்புலம் படரின் இழைஅணிந்து
புன்றலை மடப்பிடி பரிசி லாகப்

பெண்டிருந் தம்பதம் கொடுக்கும் வண்புகழ்க்
கண்டீ ரக்கோன் ஆகலின் நன்றும்
முயங்க லான்றிசின் யானே பொலந்தேர்
நன்னன் மருகன் அன்றியும் நீயும்
முயங்கற் கொத்தனை மன்னே வயங்குமொழிப்
பாடுநர்க் கடைத்த கதவின் ஆடுமழை
அணங்குசால் அடுக்கம் பொழியும்
மணங்கமழ் மால்வரை வரைந்தனர் எமரே.

இதன் உரையில், 'நன்னன் மருகனன்றியும என்றதற்கு, பெண்கொலை புரிந்த நன்னன்போல, வரையாநிரையத்துச் செலீஇயரோ அன்னை என்றமையின் அதுவும் வரைவதற்கு ஒரு காரணமாக உரைப்பாரும் உளர்' என்று உரையாசிரியர் எழுதியுள்ளார்.

**சோறு அளித்த சேரன் :**

ப. 17. இரண்டு படைக்கும் சேரன் உணவு அளித்தான் என்பதைப் **புறநானூற்றில்** உள்ள இரண்டாவது பாட்டின் உரையில், உரையாசியர் தெரிவிக்கிறார். "பெருஞ் சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்" என்ற அடிக்கு, 'பெருஞ் சோறாகிய மிக்க உணவை இரு படைக்கும் வரையாது வழங்கினோய்' என்று எழுதிய உரையிலிருந்து இது விளங்கும்.

ப. 24. "மண்திணிந்த" என வரும் பாடல் புறநானூற்றின் இரண்டாவது பாட்டு. 'சேரமான் பெருஞ் சோற்றுதியஞ் சேரலாதனை முரஞ்சியூர் முடிநாகராயர் பாடியது' என்பது அதன்பின் உள்ள பழங்குறிப்பு.

**உழுபடையும் பொருபடையும் :**

'சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை வெள்ளைக்குடி நாகனார் பாடிப் பழஞ் செய்க்கடன் வீடு

கொண்டது' என்ற குறிப்புடன் புறநானூற்றில் உள்ள 35-ஆம் பாடலைக் கொண்டு இவ்வரலாறு அமைக்கப் பெற்றது.

அந்தப் பாடல் வருமாறு :

நளிஇரு முந்நீர் ஏணி யாக
வளியிடை வழங்கா வானஞ் சூடிய
மண்திணி கிடக்கைத் தண்டமிழ்க் கிழவர்
முரசுமுழங்கு தானை மூவ ருள்ளும்
அரசெனப் படுவது நினதே பெரும;
அலங்குகதிர்க் கனலி நால்வயிற் றோன்றினும்
இலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினும்
அந்தண் காவிரி வந்துகவர் பூட்டத்
தோடுகொள் வேலின் தோற்றம் போல
ஆடுகட் கரும்பின் வெண்பூ நுடங்கும்
நாடெனப் படுவது நினதே யத்தை; ஆங்க
நாடுகெழு செல்வத்துப் பீடுகெழு வேந்தே,
நினவ கூறுவல். எனவ கேண்மதி:
அறம்புரிந் தன்ன செங்கோல் நாட்டத்து
முறைவேண்டு பொழுதிற் பதன்எளி யோர்ஈண்டு
உறைவேண்டு பொழுதிற் பெயல்பெற் றோரே;
ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ
மாக விசும்பின் நடுவுநின் றாங்குக்
கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை
வெயில்மறைக் கொண்டன்றோ அன்றே; வருந்திய
குடிமறைப் பதுவே, கூர்வேல் வளவ;
வெளிற்றுப்பனந் துணியின் வீற்றுவீற்றுக் கிடப்பக்
களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை
வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்துப்
பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே!
மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்
காவலர்ப் பழிக்கும்இக் கண்ணகன் ஞாலம்;

அதுநற் கறிந்தனை யாயின், நீயும்
நொதுமலாளர் பொதுமொழி கொள்ளாது
பகடுபுறந் தருநர் பாரம் ஓம்பிக்
குடிபுரந் தருகுவை யாயின்,
அடிபுறந் தருவர் அடங்கா தோரே.

இதன் உரையில், 'முறைவேண்டு பொழுதிற் பதனெளியோர் ஈண்டு உறைவேண்டு பொழுதிற் பெயல் பெற்றோரென்ற கருத்து, நீயும் பதனெளியை யாதல் வேண்டும், அவ்வாறு பெயல் பெறுதற் கென்றவாறும்' என்றுள்ள பகுதியும் இந்தக் கதைக்குப் பயன்பட்டது.

**கலக்கமும் தெளிவும் :**

இதற்கு ஆதாரமான புறநானூற்றுப் பாடல் வருமாறு :

வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅ துருகெழு குமரியின் தெற்கும்
குணாஅது கரைபொரு தொடுகடற் குணக்கும்
குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்
கீழது, முப்புணர் அடுக்கிய முறைமுதற் கட்டில்
நீர்நிலை நிவப்பின் கீழும் மேலது
ஆனிலை உலகத் தானும் ஆனாது
உருவும் புகழு மாகி விரிசீர்த்
தெரிகோல் ஞமன்ன் போல ஒருதிறம்
பற்றல் இலியரோ ! நிற்றிறம் சிறக்க !
செய்வினைக் கெதிர்ந்த தெவ்வர் தேஎத்துக்
கடற்படை குளிப்ப மண்டி அடர்ப்புகர்ச்
சிறுகண் யானை செவ்விதின் ஏவிப்
பாசவற் படப்பை ஆரெயில் பலதந்
தவ்வெயிற் கொண்ட செய்வுறு நன்கலம்
பரிசில் மாக்கட்கு வரிசையின் நல்கிப்
பணியிய ரத்தைநின் குடையே, முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே !

இறைஞ்சுக பெருமநின் சென்னி, சிறந்த
நான்மறை முனிவர் ஏந்துகை எதிரே!
வாடுக இறைவநின் கண்ணி, ஒன்னார்
நாடுசுடு கமழ்புகை எறித்த லானே!
செலிய ரத்தைநின் வெகுளி, வாலிழை
மங்கையர் துனித்த வாண்முகத் தெதிரே!
ஆங்க, வென்றி எல்லாம் வென்றகத் தடக்கிய
தண்டா ஈகைத் தகைமாண் குடுமி,
தண்கதிர் மதியம் போலவும், தெறுசுடர்
ஒண்கதிர் ஞாயிறு போலவும்
மன்னிய பெருமநீ நிலமிசை யானே!

**போரும் நீரும்:**

ப. 43. பாண்டியன் நெடுஞ்செழியனே பாடியதாக வரும் புறநானூற்றுப் பாடல் (72) இங்குள்ள செய்திக்கு ஆதாரம்.

(திணை - காஞ்சி; துறை - வஞ்சினக் காஞ்சி.)

நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்!
இளையன் இவனென உளையக் கூறிப்
படுமணி இரட்டும் பாவடிப் பணைத்தாள்
நெடுநல் யானையுந் தேரும் மாவும்
படையமை மறவரும் உடையம் யாமென்று
உறுதுப் பஞ்சா துடல்சினஞ் செருக்கிச்
சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொடு
ஒருங்ககப் படேஎ னாயின், பொருந்திய
என்னிழல் வாழ்நர் செல்நிழற் காணாது,
'கொடியன்எம் இறை' எனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலேன் ஆகுக!
ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகஎன் நிலவரை!

புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க் கீயா இன்மையான் உறவே!

ப. 46. நெடுஞ்செழியனது போர்க்கோலம் கண்டு புலவர் பாடிய பாடல்கள் வருமாறு:

கிண்கிணி களைந்தகால் ஒண்கழல் தொட்டுக்
குடுமி களைந்தநுதல் வேம்பின் ஒண்தளிர்
நெடுங்கொடி உழிஞைப் பவரொடு மிலைந்து
குறுந்தொடி கழித்தகைச் சாபம் பற்றி
நெடுந்தேர்க் கொடுஞ்சி பொலிய நின்றோன்
யார்கொல்? வாழ்கஅவன் கண்ணி!
—புறநானூறு, 77, இடைக்குன்றூர் கிழார் பாடியது.

ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்
புதுவ தன்றிவ் வுலகத் தியற்கை;
இன்றி னூங்கோ கேளலம்: திரள்அரை
மன்ற வேம்பின் மாச்சினை ஒண்டளிர்
நெடுங்கொடி உழிஞைப் பவரொடு மிடைந்து
செறியத் தொடுத்த தேம்பாய் கண்ணி
ஒலியல் மாலையொடு பொலியச் சூடிப்
பாடின் தெண்கிணை கறங்கக் காண்டக
நாடுகெழு திருவிற் பசும்பூட் செழியன்
பீடும் செம்மலும் அறியார் கூடிப்
பொருதும் என்று தன்றலை வந்த
புனைகழல் எழுவர் நல்வலம் அடங்க
ஒருதான் ஆகிப் பொருதுகளத் தடலே!
—புறநானூறு, 76, இடைக்குன்றூர் கிழார் பாடல்.

குடபுல வியனார் பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு அறிவுறுத்திக் கூறிய பாட்டு வருமாறு:

முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇப்
பரந்துபட்ட வியன்ஞாலம்
தாளிற் றந்து தம்புகழ் நிறீஇ
ஒருதாம் ஆகிய உரவோர் உம்பல்,

ஒன்றுபத் தடுக்கிய கோடிகடை இரீஇய
பெருமைத் தாகநின் ஆயுள் தானே!
நீர்த்தாழ்ந்த குறுங்காஞ்சிப்
பூக்கதூஉம் இனவாளை
நுண்ணாரற் பருவராற்
குரூஉக்கெடிற்ற குண்டகழி
வானுட்கும் வடிநீண்மதில்
மல்லல்மூதூர் வயவேந்தே,
செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டினும்
ஞாலம் காவலர் தோள்வலி முருக்கி
ஒருநீ யாகல் வேண்டினும் மற்றதன்
தகுதி கேள்இனி: மிகுதி யாள,
நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே;
உண்டி முதற்றே உணவின் பிண்டம்;
உணவெனப் படுவது நிலத்தொடு நீரே;
நீரும் நிலனும் புணரி யோரீண்டு
உடம்பும் உயிரும் படைத்திசி னோரே.
வித்திவான் நோக்கும் புன்புலம் கண்ணகன்
வைப்பிற் றாயினும், நண்ணி ஆளும்
இறைவன் தாட்குத வாதே; அதனால்,
அடும்போர்ச் செழிய, இகழாது வல்லே
நிலன்நெளி மருங்கில் நீர்நிலை பெருகத்
தட்டோர் அம்ம இவண்தட் டோரே;
தள்ளா தோர்இவண் தள்ளா தோரே.

—புறநானூறு, 18.

## தாயின் பிரார்த்தனை :

இந்த வரலாற்றுக்கு மூலமாகிய ஐங்குறுநூறு 5-ஆம் பாடல், 'புறத்தொழுக்கிலே நெடுநாள் ஒழுகி, "இது தகாது" எனத் தெளிந்த மனத்தனாய் மீண்டு தலைவியோடு கூடி ஒழுகா நின்ற தலைமகன் தோழியோடு சொல்லாடி,

"யான் அவ்வாறு ஒழுக நீயிர் நினைத்த திறம் யாது?" என்றாற்கு அவள் சொல்லியது' என்ற குறிப்போடுள்ளது.

முதலைப்போத்தைப் பற்றிய செய்தியை உள்ளுறை உவமமாக்கி, 'என்றது ஒருங்கு வாழ்வாரைப் பழமை நோக்காது உயிர் கவர்வான் என்பதாம்' என்று விளக்கு வார் பழைய உரைகாரர்.

அன்புப் பார்வை:

தொண்டை மண்டல சதகத்தில் உள்ள 13-ஆம் பாட்டு இவ்வரலாற்றுக்கு ஆதாரம். பாட்டு முழுவதும் பின்வருமாறு:

தெள்ளத் தெளிந்தவர் செய்தக்க
தோர்முறை செய்யிலையா
எள்ளத் தனைமலை யத்தனை
யாம்என்ப இன்றறிந்தோம்
உள்ளற் கரிய துடையாடை
கிறிய தொன்றுமொரு
வள்ளல் தகைமையொ டொத்துள
தால்தொண்டை மண்டலமே.

புலவர் செய்த சோதனை:

இவ்வரலாற்றுக்கு ஆதாரம் கொங்குமண்டல சதகம், 51-ஆம் பாடல்.

திருத்து புகழ்பெறும் ஆனூரிற்
சர்க்கரை செந்தமிழோன்
விருத்த முடன்அன்னை மேல்ஏறத்
தாய்வெகு ளாமல்எனைப்
பொருத்த முடன்பத்து மாதஞ்
சுமந்து பொறையுயிர்த்தாய்
வருத்தம் இதில்என்ன என்றான்
அவன்கொங்கு மண்டலமே.

இதற்கு மேற்கோளாக, இச் சதகத்தின் பதிப்பாசிரியராகிய ஸ்ரீ தி. அ. முத்துசாமிக்கோனார்,

அன்னைவெரிந் மேற்கொளச்சேய்
ஆனனத்தை நோக்குதலும்
என்னையீ ரைந்துதிங்கள்
இன்பமாய்ச் சுமந்தீரே
இவரை ஒருவிமிட
மேசுமப்பீர் என்றுரைத்த

என்ற நல்லதம்பிச் சர்க்கரை காதல் என்னும் நூலில் உள்ள பகுதியை அடிக்குறிப்பாகக் காட்டியிருக்கிறார்.

**சேதுபதியின் மோதிரம் :**

ப. 77. இரகுநாத சேதுபதி ஒருதுறைக் கோவையென்பது, நாணிக் கண்புதைத்தல் என்ற ஒரே துறையில் நானூறு பாடல்களை அமைத்துப் பாடிய பிரபந்தம்.

**பரதேசியின் உபாயம் :**

இதில் உள்ள கண்ணிகள் நாடோடியாக வழங்குபவை.

---

